# வைதிக தர்ம வர்த்தனி

மலர் 12
இதழ் 2

விளம்பி ௵
கார்த்திகை ௴



ஆசிரியர்: ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.

## விளம்பிஹு கார்த்திகைமீ சரத்ருது தக்ஷிணாயனம்.

| தேதி | இங்கிலீஷ் | வாரம் | திதி. | நா. வி. | நக்ஷ. | நா. வி. | யோ. | ஸ்ரா. திதி. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | ஞா. | ஷஷ்஠. | 39-17 | உத்தி. | 27-42 | அ. | — |
| 2 | 17 | திங. | ஸப். | 39-40 | சிர. | 29-10 | அ. சி. | ஸப். |
| 3 | 18 | செவ். | அஷ்ட. | 42-10 | அவி. | 32-42 | சி. ம. | அஷ்ட |
| 4 | 19 | புத | நவ. | 46-25 | சத. | 38-00 | சி. அ. | நவ. |
| 5 | 20 | வியா | தச. | 52-5 | பூரட். | 44-40 | சி. | தச. |
| 6 | 21 | வெள். | ஏகா. | 58-37 | உத்தி. | 52-12 | சி. | ஏகா. |
| 7 | நவம்பர் 22 | சனி. | த்வா. | 60-0 | ரேவ. | 60-00 | பி. | த்வா. |
| 8 | 23 | ஞா. | ,, | 5-25 | ,, | 00-5 | அ. சி. | த்ர. |
| 9 | 24 | திங். | த்ர. | 12-8 | அசு. | 7-53 | சி. | சசி. |
| 10 | 25 | செ ○ | சதுர். | 18-20 | பர. | 15-12 | சி. | — |
| 11 | 26 | புதன். | பௌ. | 23-43 | க்ருத் | 21-48 | அ. சி. | பௌ |
| 12 | 27 | வியா. | ப்ர. | 28-15 | ரோ. | 27-32 | ம. | ப்ர. |
| 13 | 28 | வெள். | த்வி. | 31-43 | மிருக. | 32-18 | சி. | த்வி. |
| 14 | 29 | சனி. | த்ரி. | 34-12 | திரு. | 36-5 | சி. | த்ரி. |
| 15 | 30 | ஞா. | சது. | 35-35 | புன. | 38-47 | சி. | சது. |
| 16 | 1 | திங். | பஞ். | 35-50 | பூச. | 40-28 | சி. | பஞ். |
| 17 | 2 | செவ். | ஷஷ்஠. | 34-57 | ஆயி. | 41-00 | சி. | ஷஷ்஠ |
| 18 | 3 | புத. | ஸப். | 32-53 | மக. | 40-20 | சி. அ. | ஸப். |
| 19 | 4 | வியா. | அஷ்ட. | 29-35 | பூர. | 38-30 | சி. ம. | அஷ்ட |
| 20 | 5 | வெள். | நவ. | 25-0 | உத். | 35-28 | சி. அ. | நவ. |
| 21 | 6 | சனி | தச. | 19-20 | ஹஸ். | 31-17 | ம. | த. ஏ. |
| 22 | 1958 7 | ஞா. | ஏகா. | 12-38 | சித். | 26-10 | சி. | த்வா. |
| 23 | 8 | திங். | த்வா. | 5-10 | சுவா. | 20-22 | அ. ம. | த்ர. |
|  |  |  | த்ர. | 57-12 |  |  |  |  |
| 24 | 9 | செவ் | சசி. | 49-5 | விசா. | 14-8 | ம. சி. | சசி. |
| 25 | டிசம்பர் 10 | புதன் ● | அமா. | 41-12 | அனு. | 7-52 | சி. | அமா. |
| 26 | 11 | வியா. | ப்ர. | 33-57 | கேட். | 2-00 | சி. | ப்ர. |
|  |  |  |  |  | மூலம். | 56-57 |  |  |
| 27 | 12 | வெள். | த்வி. | 27-50 | பூரா. | 53-10 | சி. | த்வி. |
| 28 | 13 | சனி | த்ரி. | 23-15 | உத்தி. | 51-5 | சி. | த்ரி. |
| 29 | 14 | ஞா. | சது. | 20-27 | சிர. | 50-53 | அ. ம. | ச. ப. |
| 30 | 15 | திங். | பஞ். | 19-47 | அவி. | 52-47 | சி. | ஷஷ்஠ |

1உ ஸ்கந்த ஷஷ்டி, 6, 22உ ஏகாதசி, 8, 23உ ப்ரதோஷம், 9உ பரணிதீபம், 10உ அ. தீபம், கிருத்திகை, 25உ அமாவாசை.

---

**இங்கித மறிந்து நடப்பது தெய்வ குணம்.**

# வைதிக தர்ம வர்த்தனீ.



**விளம்பி௵ கார்த்திகைமீ**

**மலர் 12.] [இதழ் 2.**

தனிப்ரதி அணு 7.
வருஷசந்தா ரூ. 5

கார்யாலயம்: **கடவாசல்,**
**வடகால் P.O. (Via.) சீர்காழி**
(தஞ்சை ஜில்லா.)


## பொருளடக்கம்.



### ஸுவர்ணமும் மண்கட்டியும் ஒன்றே.

காஞ்சியிலிருந்து காசிக்குப் புறப்பட்டது ஒரு தம்பதி. இருவரும் பக்தர்கள். வைராக்யம் முள்ளவர்கள். முன்னே செல்லும் பதிவழியில் ஒரு ஸவரன் கிடக்கக் கண்டார். அதைக் கண்டால்ஸதி அதில் விருப்பம் கொள்வளோ என எண்ணி அதை அவள் கண்ணில் படாமல்மறைத்துக்கொண்டு நீமுன்னே போ என்றார் மனைவியை.

அதை அறிந்த மனைவி நீங்கள் தான் பின் தங்கினீர்கள். அது உமது கண்ணில் ஸுவர்ணம் என தோன்றி அல்லவா மறைத்தீர்கள்! என் கண்ணில் அது மண்கட்டி போல் தான் தோன்றிற்று என்றாள். **வைராக்யமே முக்திக்குவிதை.**

ஸமலோஷ்டாச்ம காஞ்சந: (கீதை)

## ஓர் அறிவிப்பு.

★ இதுவரையில் சந்தா துகையை அனுப்பாதவர்கள் தயவுசெய்து அனுப்பவேண்டுகிறோம்.

★ விலாஸம் மாறினால் உடன் தெரிவிக்க வேண்டுகிறோம்.

★ காப்பி வராதவர்கள் அடுத்தமாத இதழ் வெளிவருவதற்குள் தெரிவித்தால்தான் மறு காப்பி அனுப்ப சௌகர்யமாய் இருக்கும். **மானேஜர்.**

பின்னர் உன்னை மனைவி முதலானோர் வெறுத்த தாலும், பிராம்மணர்கள் உன்னைப் பாவியென்று கழித்த தாலும், நீ அளித்ததை ஏற்றுக்கொள்ளாமல் சென்றதா லும் உன்னைப் பல துன்பங்கள் வாட்டின. நீ உனது குறைகளை எண்ணி எண்ணி ஏக்கமுற்றாய். ஸகல ஆபத் துக்களையும் விலக்கி ரக்ஷிப்பவர் விநாயகர். அவருக்கு ஆலயத்தைக் கட்டிவைப்பதைவிட மேலான தர்மம் ஒன்று மில்லை என்று நிச்சயித்தாய். அதுவரையில் பல துன் மார்க்க கார்யங்களால் சேகரித்திருந்த பொருள்களை எல்லாம் எடுத்துக்கொண்டு இடிந்துகிடந்த விநாயக ஆலயத்திற்கு வந்தாய். அவ்வாலயத்தில் அநாதியாய் எழுந்தருளியிருக்கின்ற கணேச மூர்த்தியைப் பக்தியுடன் தரிசித்தாய். உனது மனக்கவலை எல்லாம் சொல்லி வணங்கினாய். சிறந்த சில்பி முதலானவர்களை வர வழைத்து ஸ்வர்ணத்தால் கர்ப்பகிருகஞ் செய்வித்தாய். அதன் முகப்பில் மாணிக்கம் முதலிய இரத்தினங்களை இழைத்தாய். அர்த்த மண்டபம், மகா மண்டபம், மடைப் பள்ளி, யாகசாலை, ஆகாயத்தை யளாவிய உயர்ந்த மதில் முதலானவைகளை வெள்ளி முதலிய உலோகங்களாலும், கருங்கல் செங்கல் முதலியவைகளாலும் செய்விததாய். ஆதிசைவ பிராம்மணர்களைக் குடியேற்றி, அவர்களால் விநாயகமூர்த்திக்கு அபிஷேகம் முதலிய ஆராதனைகளைச் செய்வித்தாய். ஸகல வாத்தியங்களும் முழங்கச் செய் தாய். ஸ்வர்ணத்தால் செய்யப்பட்டு நவரத்தினங்களால் இழைக்கப்பட்ட வாஹனங்கள், குடைகள், பல்லக்குகள், இரதங்கள் முதலானவைகளை வரவழைத்தாய். யாவரும் கண்டு அற்புதம்! அற்புதம்!! என்று கொண்டாடத் தக்க திருவிழாக்களை நடத்தினாய். இவ்வாறு அளவற்ற சிறப்புடன் பூஜை திருவிழாக்களும் இடைவிடாது நடத்தி வர, உன் வாழ்நாள் முடிவெய்தி இறந்துவிட்டனை.

பின்னர், யமதூதர் உன்னைக் கொண்டுபோய் யம னிடம் விட்டனர். யமன் சித்ரகுப்தனை இவனுடைய பாப புண்யங்களைச் சொல்லு என்று கூற உடனே அவன் நீ செய்துவந்த கார்யங்களை யெல்லாம் கூறினான்.

யமன் அனைத்தையும் கேட்டு சற்றுநேரம் ஆலோசித்து இவன் செய்த பாபங்களெல்லாம் விநாயகரின் அருளால் ஒழிந்துவிட்டன. ஆயினும், நீ மண்ணுலகில் மன்னனாகப் பிறப்பாயாக. மிகுதி பாபத்தை அனுபவிக்க வியாதி உண்டாகட்டும் என்றார். அந்த நீ, அரசனாகப் பிறந்து இக் கொடிய வியாதியையும் அனுபவிக்கிறாய். இத் தீவினைப் பயனும் ஒழியுமாறு நீ அவ் விநாயகக் கடவுளையே போற்றவேண்டுமென்று சொன்னார் பிருகு முனிவர். முனிவர்களே! காமந்தனென்னும் பெயருக்கேற்ற படி காமாந்தகாரனாகத் திரிந்து அளவற்ற பாதகங்களைச் செய்துவந்து இறக்குங் காலத்திற் செய்தவொரு புண்ணியத்தினால் அப் பாதகங்கள் அகன்றன. அரசனுமானான். விநாயகக் கடவுளைச் சதாகாலமுஞ் சிந்திப்பவர்கள் எவ்வளவு இன்பம் பெறமாட்டார்கள்?

இவ்வளவு கருணையோடு பிருகுமுனிவர் அருளிச்செய்ய அதில் ஸோமகாந்த ராஜனுக்கு ஸந்தேஹமுண்டாயிற்று. உடனே அவன் சரீரத்திலிருந்து ஆயிரம் வலியன் பட்சிகள் தோன்றி வஜ்ரம்போன்ற மூக்குகளினால் நோய்கண்ட சரீரத்தைக் கொத்தித் தசைகளையெல்லாம் பிடுங்கின. அரசன் அச்சமுற்று அதை ஸஹிக்கமாட்டாது வருந்தி முனிவரது பாதத்தில் அடியற்ற மரம்போல் விழுந்து, ஓ தவசிரேஷ்டரே! அபயம்! அபயம்!! அடியேன் படுகின்ற துன்பத்தை நீக்கி ஆட்கொள்ளுங்கள்! நான் பாபி! கருணை புரிக! என பலவாறு ஓலமிட்டான். சுதர்மையும் திடுக்கிட்டுப் பிருகுமுனிவரைச் சாஷ்டாங்கமாகப் பணிந்து, கண் நீர்தாரை பெருக, எங்கள் மனோரதங்களை ஈடேற்ற வந்த தயாநிதியே! மாங்கல்ய பிட்சை தந்தருள வேண்டும்! என்று பிரார்த்தித்தாள்.

அமைச்சர்களும் கீழே விழுந்து நமஸ்கரித்து, எமக்கு அன்னையும் பிதாவுமாய் எழுந்தருளிய கருணானந்த மூர்த்தியே! அரசனை வலியன் பக்ஷிகளெல்லாங் கூடி வதைக்கின்றனவே! அவைகளை விலக்கி யாட்கொள்ள வேண்டாமோ? என்று அலறினார்கள். முனிவர்களும் பயந்து. ஆ! ஆ!! சுவாமீ! இப் பக்ஷிகள் செய்யுங் கொடுமையைக் காணக் கண் கூசுகின்றதே! என்றனர். இவ்வாறு யாவரும் வருந்தி முறையிட, ப்ருகுமுனிவர்

ஸோமகாந்தனைப் பார்த்து, அரசனே! யாம் சொன்னவை களை உண்மையென்று நம்பாமல் இருந்தாய்! ஆதலால் உனக்கு இத் துயரம் நேர்ந்தது! இனியாயினும் நான் கூறுவது மெய்யென்று நம்புவாயாக! அதனால் நீயும் சுத்தனாகலாமென்று கூறினர். பக்ஷிகளை நோக்கி ஹூம் என ஶப்தம்செய்தார். அவ்வோசையைக் கேட்டு வலியன் பட்சிகள் வானத்தில் பறந்து ஓடின.

பின்னர் வேந்தன் முனிவர் சொன்னது எல்லாம் உண்மையென்று நம்பினன். மஹரிஷி கூறியதில் அரசன் ஸந்தேகங் கொண்டபடியால் பக்ஷிகள் துன்பம் விளைவித் தன. மஹரிஷி கணேஶனது அஷ்டோத்தர ஶதநாமா வைக்கூறி, ஜலத்தை அவன்மீது தெளித்தார். அரசனது இடது நாஸியிலிருந்து அவன் செய்த பாபம் மிகப் பயங் கரமான உருவத்தோடு தோன்றி அரசனையே பக்ஷிக்க ஆரம்பித்தது. முனிவர் அதைத் தடுத்து, நீ யார்? ஏன் இவனைப் பக்ஷிக்கின்றாய்? என்று கேட்க, இவனால் கொல்லப்பட்ட பிராம்மணனது ஜீவன் யான்! பசியினல் இவனைப் பக்ஷிக்கின்றேன்! என்றது. இவனை விட்டு விட்டு அருகில் உள்ள மாமரத்தைப் புஜி என முனிவர் கூற, அம் மரம் ஒரு நிமிஷத்தில் சாம்பலாயிற்று. முனிவர் அரசே! உனது தோஷத்தினால் மரம் இங்ஙனம் சாம்ப லாயிற்று. அதனருகில் அமர்ந்து கணேச புராணத்தைக் கேள்! உனது பாப மகன்றவுடன் இம்மரம் தழைத்து முன்போல் ஆகும்! என்றார். அரசனும் அங்ஙனம் அமர, ப்ருகு கணேஶ புராணத்தைக் கூற ஆரம்பித்தார். [ இக்கதை ஏழு ஜன்மங்களில் செய்த பாபத்தையும் போக்கடிக்க வல்லது ]

## வியாஸர் கணேசனையுபாஸித்து உபபுராணங்களை எழுதியது.

நாராயண அம்ஶமான வேதவ்யாஸர் முக்காலத்தையு முணர்ந்தவர். ஒன்றாக இருந்த வேதத்தை நான்காகப் பிரித்தவர். பதினெட்டு புராணங்களையு மியற்றியவர். அத்தகையவரும் புராணத்தை எழுத ஆரம்பித்த காலத் தில் விநாயகரைப் பூஜைசெய்யாமல் புராணங்களை எழுத ஆரம்பித்தார். அச்சமயம் புராணங்கள் அவர் மனதில்

சிறிதேனும் தோன்றவில்லை. உடனே பிரம்மலோகம் சென்று சதுர்முகனை வணங்கி இக்குறையைத் தெரிவித்தார். அவர் ஒவ்வொருவரும் எந்த காரியத்தை ஆரம்பித்தாலும் முழுமுதற் கடவுளான விநாயகரை வணங்கி ஆரம்பிக்கவேண்டும். நானும் மஹாவிஷ்ணுவும் பரமசிவனுங் கூட விக்னங்களைப் போக்கடிப்பவரான விநாயகரைப் பூஜை செய்கின்றோம். நீ அங்ஙனம் செய்யாததால் உனது கார்யத்திற்கு விக்னம் தோன்றிற்று. ஏழுகோடி மந்திரங்களை உடைய விநாயகரின் பெருமையை நாங்கள் பூர்ணமாக அறியவில்லை. அவைகளுள் ஷடக்ஷரியும் ஏகாக்ஷரியும் மிகச் சிறந்ததாம். ஸ்நாநம் செய்து ஸர்வவ்யாபியான விநாயகருக்கு முதலில் மனதினால் ஸகல உபசாரங்களையும் செய்து அவருடைய மூல மந்திரத்தை அவர் வரமளிக்கும்வரை ஜபிக்கவேண்டும் என்று கூறி வ்யாஸரின் ப்ரார்த்தனைக் கிணங்க ஏகாக்ஷர மஹா மந்த்ரத்தை உபதேசித்தார். வ்யாஸர் மேலே கூறினார்.

கணநாதன் ஓங்கார வடிவனாக உள்ளவன். அவரே எல்லா தேவதா ஸ்வரூபமாக இருக்கின்றபடியால் எல்லா மந்திரங்களையும் ஓங்காரத்துடனேயே ஜபிக்கவேண்டும். ஓர் பிரளய காலத்தில் எல்லா வஸ்துக்களும் விநாயகரிடம் லயமாகி எல்லாம் சூன்யமாக இருந்தது. சிலகாலம் கழித்து உலகைப் படைக்கக் கருதிய விநாயகர் முதலில், தான் கஜமுகனாகத் தோன்றினார். அவரே நாதத்துடன் கூடிய ஓங்காரமாக ஆனார். அதைக்கொண்டு மூன்று உலகங்களையும் பிரம்ம ருத்ர விஷ்ணுக்களையும் படைத்தார். சராசரம் நிறைந்த மாயாமயமான இவ்வுலகம் விக்னேசனுடைய மாயையினாலேயே தோன்றிற்று. மும்மூர்த்திகளும் அவரது மாயையிலகப்பட்டு, நாம் யார்? எதற்காக உண்டானோம்? என்ன செய்யவேண்டும்? என அறியாமல் ப்ரமித்தார்கள். ஸகல லோகங்களையும் சுற்றிவந்தார்கள். பரமாத்மாவைக் காணாமல் ஆயிரம் ஆண்டுகள் ஆஹாரமின்றி கடும்தவம் புரிந்தனர். அதனால் களைத்து பூமியிற் புகுந்து ஸமுத்ரங்களையும் மலைகளையும் கடந்து ஆச்சர்யமடைந்தனர்.

ஓர் அரிய ஸரஸில் ஸ்நானம் செய்து ஆங்கு ஜ்யோதிர்மயமான விமானத்தைக் கண்டார்கள். அந்த தேஜஸ்

ஷினால் பரவசர்களாகி பசி தாகம் அதிகரிக்க, களைப்புற்றுப் பெருமூச்சுவிட்டார்கள். தங்களது தபஸ் பயனற்றது என வருந்தினார்கள். அச்சயம் கண்ணையும் மனதையும் கவரும்படியான திவ்ய மங்கள ரூபத்தோடு விநாயகர் தோன்றினர். சிவந்த வஸ்திரமணிந்து அதன்மீது அரணால் அணியப்பட்டிருந்தது. நான்கு கரங்களிலும் கத்தி கேடயம் வில் அம்பு காணப்பட்டன. ஒரு தந்தத்துடன் பிரகாசிக்கும் விநாயகரை வணங்கி மூவரும் துதித்தார்கள். ஸ்தவராஜம் என்ற இதைக் கேட்டு விநாயகர் ஸந்தோஷமடைந்து பிரம்மாவுக்குப் படைக்கும் சக்தியையும் மஹாவிஷ்ணுவுக்கு உலகைக் காக்கும் சக்தியையும் சிவனுக்கு உலகை லயம்செய்யும் சக்தியையும் தந்தார்.

பிரம்மா கணேசனை வணங்கி, உலகைக்கண்டு அறியாத நான் எப்படிப் படைப்பது? என்று கேட்க, இப்பொழுதே நீ எல்லாவற்றையும் அறிவாய் என மூச்சுக் காற்றோடு பிரம்மாவை கணேசர் தனது உள்ளே தள்ளினார். அங்கு அத்திப் பழம்போல் எண்ணிறந்த பிரம்மாண்டங்களையும் கண்டார். ஒரு பழத்தைப் பேதித்து அதனுள்ளே மும்மூர்த்திகளையும் ஸகலதேவரிஷி மனுஷ்ய மிருகஜாதிகளையும் கண்டார். பதினான்கு லோகங்களையும் கண்டு ஆச்சர்ய மடைந்து கணேசனை ஸ்தோத்திரம் செய்தார். அவரருளால் ஸகல வேதசாஸ்த்ரங்களையும் உலகைப் படைக்கும் வகையையு மறிந்தார். பிறகு பிரம்மாவுக்குக் கர்வம் உண்டானது. உடனே அவர் உலகைப்படைக்க ஆரம்பித்தார். அச்சமயம் மிக பயங்கரமான பூதங்கள் பிரம்மாவைச் சூழ்ந்துகொண்டன. சில அவரைப் பரிஹஸித்தன. சில ஆலிங்கனம் செய்து கொண்டன. மற்றும் பலர் செய்யும் பலவகையான துன்பங்களைக் கண்டு பிரம்மா மூர்ச்சையடைந்தார்.

சிறிதுநேரம் சென்றபின் மனதில் விநாயகர் கூறிய மந்த்ரம் நினைவிற்கு வந்தது. பகவானைத் துதிசெய்ய ஆரம்பித்தார். ஆகாயத்திலிருந்து தபஸ் செய் என்று ஓர் குரல் தோன்றிற்று. மந்த்ரமும் இடமும் இல்லாமல் எப்படித் தவம் செய்வது? என யோசிக்கும்பொழுது, வடத்தைப் பாரென்று ஓர் குரல் கேட்டது. சிலகாலம்

சென்றபின் ஜலமயமான உலகில் ஓர் வடவ்ருக்ஷத்தைக் கண்டார். அதனுடைய இலைமீது அழகிய உருவத்துடன் கூடிய ஒரு குழந்தையைக் கண்டார். அங்கிருந்து எழுந்து வந்து பிரம்மாவின் மடியிலமர்ந்து மிகச்சிறுகுழந்தையான நீ மிகப்பெரியவன் என்றும் எல்லாமறிந்தவன் என்றும் கர்வம் கொண்டாய். அதனால் சிருஷ்டிக்கு விக்நமும் பல கஷ்டங்களும் தோன்றின. ஏகாக்ஷரமெனும் கணபதி மந்திரத்தை உபதேசம் செய்து இதை ஜபித்துவா என்று கூறி மறைந்தார். அவரே விநாயகர்.

ஸ்வப்னத்தில் இதைக்கண்ட பிரம்மா மறுபடியும் தனக்கு அந்த திவ்ய தர்சனம் எப்பொழுது கிடைக்கும் என்று ஏங்கித் தாமரையில் ஒருகாலால் நின்றுகொண்டு பத்தாயிரம் ஆண்டு அம்மந்திரத்தை ஜபித்தார். அதன் பிறகு விநாயகர் ப்ரத்யக்ஷமாகி தனது உருவத்தின் தத்து வத்தைக் கூறி என்னை த்யானம் செய்யாமலும் துதிக்கா மலும் கர்வத்துடன் ஸ்ருஷ்டிக்க ஆரம்பித்ததால் துன்ப மடைந்தாய். பக்தியுடன் ஜகத்தைப் படைத்துவாவென கூறி ஸித்தி புத்திகளுடன் கூட மறைந்தார். பிரம்மா மனதினால் ஏழு புத்திரர்களைப் படைத்தார். தனக்கு ஸஹாயமாக அவர்களைக் கொண்டு முகத்திலிருந்து பிராம்மணரையும் அக்னியையும் உண்டுபண்ணினார். கைகளிலிருந்து க்ஷத்ரியரையும் துடையிலிருந்து வைஸ்ய ரையும் பாதத்திலிருந்து நான்காம் வர்ணத்தவரையும் உண்டுபண்ணினார்.

கண்களிலிருந்து சூர்யனையும் நாசியிலிருந்து காற் றையும் நாபியிலிருந்து அந்தரிக்ஷலோகத்தையும் தலையில் இருந்து த்யுலோகத்தையும் கால்களிலிருந்து பூமியையும் காதிலிருந்து திக்குகளையும் மற்றும் பல வஸ்த்துக்களை யும் படைத்தார். சிலநாள் சென்றபின் படுத்துறங்கும் பிரம்மாவினுடைய இரு காதுகளிலிருந்து மதுகைடபர் என இருகோர ராக்ஷஸர்கள் தோன்றினார்கள். க்ரூரமான வாக்குகளாலும் செயல்களாலும், பிராம்மணர் தேவர் ரிஷிகள் ஸாதுக்கள் ஆகிய அனைவரையும் ஹிம் ஸித்தார்கள். அவர்களுடைய பயத்தால் பூமி நடுங் கிற்று. அவர்கள் பிரம்மாவை சாப்பிட ஆரம்பிக்கும்

பொழுது அவர் பயந்து நடுங்கி மஹாவிஷ்ணுவிடம் வர அவர் கண்மூடி நித்ரை செய்வதைக் கண்டு நித்ரா தேவியைத் துதிசெய்தார்.

அதற்குள் அவர்கள் ஸ்வர்க்கத்தைப் பிடித்துக் கொண்டு இந்திராதி தேவர்களுடன் போருக்கு வர அவர்கள் பயந்து ஓடினார்கள். உறக்கத்திலிருந்து விஷ்ணு விழித்துக்கொண்டு சக்ரபாணியாக யுத்தம் செய்தார். மதுகைடபர்களோடு மஹாவிஷ்ணு ஐயாயிரம் ஆண்டு போர்புரிந்தார். எவருக்கும் வெற்றியும் தோல்வியும் தோன்றவில்லை. மாயாவியான விஷ்ணு கந்தர்வரூபத்தை எடுத்து உலகம் மயங்கும்படி வீணையுடன் பாடினார். எல்லோரும் இதைக் கேட்டு மயங்கி அசைவற்று இருந்தனர். கைலாஸநாதன், நிகும்பன் புஷ்பதந்தன் என்ற இருவர்களையும் அனுப்பி இங்ஙனம் பாடுகின்றவனைத் தன்னருகே அழைத்துவரும்படிச் செப்பினார். அங்ஙனமே மஹாவிஷ்ணு கைலாஸம் வந்து ஶிவனை வணங்கி வீணகானத்தினால் ஸ்கந்தன் கணேஶ்வரன் பார்வதீ முதலிய அனைவரும் ஆனந்திக்கும்படி பாடினார்.

சிவன் அவரை ஆலிங்கனம் செய்துகொண்டு யாது வரம் வேணும் என்று கேட்க, பல்லாண்டுகள் சென்றும் ஜயிக்கமுடியாமலிருக்கும் மதுகைடபர்களைக் கொல்லுவதற்கு ஓர் உபாயம் கூறும்படி வேண்டினார். பரமசிவன் அவருடைய நக்ஷத்திர தினத்திற்கு ஸித்தி அளிக்கக்கூடிய விநாயகரின் ஷடக்ஷரீ மந்த்ரத்தை உபதேசித்தார். (அவரவர் நக்ஷத்திரத்திற்கு உசிதமான மந்த்ரம் இது எனக் கண்டறிய ஸித்தாரி சக்ரம் என்ற ஓர் விதியுண்டு). இம் மந்த்ரத்தை ஸித்த க்ஷேத்ரம் சென்று ஜபம் செய் என்று கூற மஹாவிஷ்ணுவும் அங்குசென்று பக்தியுடன் ஜபம் செய்தார். விநாயகர் அவர் எதிரில் தோன்றி முன்னமே என்னை அர்ச்சித்திருந்தால் ஜயம் பெற்றிருப்பாய்! எனது யோகமாயையினால் நீ உறங்கினாய்! மதுகைடபர்களையும் மற்றுமுள்ள அரக்கர்களையும் கொல்லுவதற்கேற்ற பலத்தையும் பெறுவாய் என வரமளித்து மறைந்தார்.

மஹாவிஷ்ணு ஸித்தியடைந்த அந்த க்ஷேத்ரத்தில் ஸ்படிகமயமான ஆலயத்தை நிர்மாணம் செய்து விநாய

கரை ப்ரதிஷ்டை செய்தார். உடனே மதுகைடபரிடம் வந்து நீங்கள் மிக தைர்யத்துடன் என்னிடம் போர்புரிந்த தால் மிக ஸந்தோஷமடைந்தேன்! வேண்டிய வரத்தைக் கேளுமென்ருர். இதைக் கேட்டு நகைத்த அஸுரர், வெற்றி பெற்றவரைப்போல் வீணே கர்வங்கொண்டு பேசுகின்றீர்! உன்னிடம் வரம்வாங்க நாங்கள் துர்ப்பலர் அல்ல! உமக்கு வேண்டிய வரம் கேளும், நாங்கள் தரு கின்ருேம்! என்ருர்கள். இதுதான் தக்க ஸமயம் என்று எண்ணி மஹாவிஷ்ணு என் கையால் நீங்கள் இறக்க வேண்டும்! என்ற வரத்தைக் கொடுங்கள் என்ருர். வேறுவகையின்றி அவர்கள் அதை ஏற்கும்படி நேர்ந்தது. ஆயினும், நீரில்லா இடத்தில் எங்களேக் கொல்லும் என்ற வரத்தைத் தரும்படி வேண்டினர்.

அங்ஙனமே மஹாவிஷ்ணு சக்ரத்திஞல் அவ்விருவ ரையும் தன் துடைமீது வைத்துக் கொன்ருர். இதைக் கண்டு வானவர் வியப்புற்று திருமாலேயும் விநாயகரை யும் துதிசெய்தனர்.

## பீமன் கணேசரை உபாஸித்தது.

விதர்ப்பதேஶத்தில் தான தர்ம சீலரான பீமன் என்ற ஓர் அரசனிருந்தான். கௌண்டின்ய நகரத்தில் சாருஹா ஸினீ என்ற மனேவியுடன் மனேரஞ்சிதன் ஸுமந்துகன் என இரு மந்த்ரிகளுடனும் மநுநீதி வழுவாமல் ஸகலவித மான போக பாக்கியங்களே அநுபவித்து வந்தான். இருந்தும் புத்ரபாக்யமில்லாமையால் மிக வருந்தி மந்த்ரி களிடத்தில் ராஜ்யத்தை ஒப்படைத்து கானகம் சென்ருன். அங்கோர் அழகிய ஸரஸ்ஸைக் கண்டு அதன் கரைமீது சிஷ்ய கணங்களுக்கிடையே தேஜோமயமாய் ப்ரகாஶிக் கும் விஶ்வாமித்ரமுனிவரைக் கண்டான். அவரைவணங்கித் தன் குறையைக் கூறினன்.

ஸத்ஸங்கத்திஞல் தனக்குப் புத்ரபாக்யமும் நற்கதி யும் கிடைக்குமென்று நம்புவதாகக் கூறினன். விஶ்வா மித்ரர் அவனது பூர்வ சரிதத்தை யறிந்து கூறினர். வேந்தே! செல்வமதத்திஞல் நீ முற்பிறவியில் குலதர்மம் வேதசாஸ்த்ரம் முதலியவைகளேக் கைவிட்டாய். உனது முன்னேர்கள் சாபமளித்தனர். உனது குல தெய்வம்

கணபதியாகும். அக் காரணத்தைக் கேள்! உனது ஏழாவது தலைமுறையில் வல்லபன் என்றோர் அரசன் இருந்தான். அவனுக்கு ஓர் புதல்வன் பிறந்தான். அவன் பிறவிக் குருடனாகவும் செவிடனாகவும் ஊமையாகவும் ஸகல ரோகங்களுக்கும் இருப்பிடமாகவும் இருந்தான். அரசன் பலவகையான பரிஹாரங்கள் செய்தும் நோய் அகன்றபாடில்லை.

அதனால் மனம் நொந்து அரசன் தக்ஷன் எனும் அவனுடன் அவன் தாயையும் காட்டிற்கு விரட்டிவிட்டான். அவ்விருவர்களும் ஆங்காங்கு பிக்ஷையெடுத்து ஜீவித்து வந்தார்கள். ஒருநாள் ஒருபிராம்மணன் மீது பட்ட காற்று இச்சிறுவன் மீதுபட உடனே அவனது நோய்களகன்றன! கண் தெரிந்தது! காதும் கேட்டது! வாயும் பேசிற்று! இதைக்கண்டு எல்லோரும் ஆஶ்சர்யப்பட்டு அவர்களுக்கு அன்னம் வஸ்த்ரம் முதலியவைகளை யளித்து வந்தார்கள். இவனை, நீ யார்? என்று ஒருவர் கேழ்க்க, வல்லபராஜனது புத்ரன்! நான் பிறக்கும்பொழுதே குருடும் செவிடும் ஊமையும் நோயாளியாகவுமிருந்தேன்! எனக்குப் பன்னிரண்டாண்டு தந்தை சிஹித்ஸை செய்தார்! என் நோய் நீங்காததால் என்னை த்யாகம் செய்துவிட்டார்! ஆங்காங்கு அலைந்து திரிந்துவந்த எனக்கு இங்குள்ள ஓர் உத்தம ப்ராம்மணனது காற்று மேல் வீசியதால் எனது நோய் அகன்றது! என்றான்.

அதைக் கேட்டு ஸந்தோஷமடைந்த ஒரு ப்ராம்மணோத்தமன் அவ்விருவருக்கும் கணபதியின் அஷ்டாக்ஷர மந்த்ரத்தை உபதேசித்தார். கணபதியின் ஸ்வரூபத்தையும் அவரை ஆராதிக்கும் வழியையும் வர்ணித்தார். கணேஶ பக்தர்மீது பட்ட காற்று உன்மீது பட்டதால் உனது நோய்கள் அகன்றன. ஆதலால் பக்தியுடன் பகவானை உபாஸியுங்கள் என்றார். இருவரும் ஆழ்ந்த பக்தியால் கடும் உபவாஸமிருந்து ஏகாக்ர மநதுடன் உபாஸித்தனர்.

சில ஆண்டுகளுக்குள்ளேயே பகவான் அவர்கள் எதிரில் மிக அழகான உருவத்துடன் தர்ஶநமளித்தார். விழுந்து பணிந்து எழுந்து நின்று தக்ஷன் விநாயகரைத் துதித்தான். மிக ஸந்தோஷத்துடன், குழந்தாய்! உனக்கு

வேண்டிய வரத்தைக் கேள்! ஆனால் எனது பக்தனை முத்கல முனிவரே உனக்கு வேண்டிய வரமளிப்பார்! என்று கூறி மறைந்தார். இருவரும் விநாயகமூர்த்தி யையே நினைத்து, ஆ! எங்கு சென்றார்? எப்படிக் காண் பேன் எனக் கதறிக்கொண்டே முத்கலரது ஆச்ரமம் சென்றனர்.

சிஷ்யர் படைசூழ உயர்ந்த ஆஸநத்தில் விநாயக மூர்த்தியை அமர்த்தி, அதற்குப் பக்தியுடன் பூஜை செய் யும் முத்கலரைக் கண்டனர். ஸாக்ஷாத் விநாயகரைப் போலவே தோன்ற, பூஜை முடிந்தபின் அவர் திருவடியை வணங்கி, மஹர்ஷே! பகவானைவிட பக்தனே சிறந்த வன் என எண்பித்தார் பகவான்! தர்சநம் தந்தும் தங்களிடமே வரம்பெறும்படி கூறினார்! என்றனர். அதனால் அளவற்ற பகவானது கருணையை நினைத்து ஸந்தோஷித்தாரவர். அவர்கள் கோரியபடி அவர்களுக்கு ஸ்திரமான செல்வத்தையும் அசஞ்சலமான விநாயக பக்தியையும் வரமாக அளித்தார்.

ஏகாக்ஷர மஹாமந்த்ரத்தையும் உபதேசித்தார். தான் இப்படி பிறவி முதலிலேயே நோய்வாய்ப்படக் காரணம் யாதென வினவினான் தக்ஷன். கருணாமூர்த்தியான முந்கலர் கூறினார். நீ முற்பிறவியில் ஸிந்துதேசத்தில் பல்லீ நகரில் கல்யாணன் என்ற வைச்யனாயிருந்தாய்! உனது புத்ரன் முற்பிறவி வாஸனையால் விளையாட்டாக ஒரு கணேச ஆலயம் அமைத்து அதில் பூஜைசெய்து வந்தான். அவனைக் கண்டு மற்ற சிறுவர்களும் விளையாட்டையும் உணவையும் மறந்து உன் புத்ரனுடன் பக்தியில் ஈடுபட் டிருந்தார்கள்.

பலமுறை பலர் பலவாறாகக் கண்டித்தும் சிறுவர்கள் அதை விடவில்லை. ஊரார் உன்னிடம் முறையிட்டனர். கோபங்கொண்டு கோவிலை இடித்துக் கணேச விக்ர ஹத்தையும் பின்னப்படுத்தினாய். சிறுவனை புத்ரனை மரத்துடன் கட்டி உன்னைக் கணேசனே விடுவிக்கட்டும், அவனே உணவளிக்கட்டும் என்று கூறி வீடு சென்றாய். சிறுவன் விநாயகரைப் பக்தியுடன் துதித்தான். கோவிலை இடித்த என் தந்தை மூடமாகவும் செவிடாகவும் குருடாக வும் நோயாளியாகவும் ஆகட்டும் என சபித்தான்.

விக்நேஶ்வர் ப்ரத்யக்ஷமாகி உன் புத்ரனை விடுவித்து அக் கோவிலை சீர்படுத்தி அவன் பெயரால் **வல்லாள கணபதி** என அழைக்கப்பட்டார். புத்ர சாபத்தால் பன்னிரண் டாண்டு ஊமையாகி கணேஶனருளால் ஸுகம் பெற்றாய் என்றார். தக்ஷன் குருசொற்படி கௌண்டின்ய முனிவரது ஆஶ்ரமத்தில் கணநாதனை நாடித் தவம் செய்துவந்தான். கௌண்டின்யதேசத்தரசன் புத்ரபாக்யமின்றி இறந்தான். முத்கல முனிவரது உபதேசத்தின்படி கஹநமெனும் பட்டத் துயானையிடம் மாலையையளித்து அரசனாக வரக்கூடிய புருஷனைத் தேடிவரும்படி அனுப்பினர் அமாத்யர். அது கௌண்டின்ய ஆஶ்ரமத்தில் தவம்புரியும் தக்ஷன் கழுத் தில் அம்மாலையை அளித்து அவனைத் தன்மீது அமர்த்தி வந்தது. நகர ஜனங்கள் கோலாஹலத்துடன் அவனுக்குப் பட்டாபிஷேகம் செய்து வைத்தனர். வீரஸேநன் எனும் வேந்தன் தக்ஷனுக்குத் தன் மகளை அளித்தான். அவர்களது ஸந்ததி ப்ருஹத்பாநு, கடகதரன், ஸுலபன், பத்மாஹரன வபுர்தீப்தன், சித்ரஸேநன் என்ற பரம்பரை வளர்ந்தது. அனைவரும் கணபதி பக்தர்கள்.

சித்ரஸேநன் மகனை நீ உன்குலதெய்வமான விநா யகரை விட்டு மற்றதெய்வங்களை உபாஸிக்கின்றாய். ஆதலால் உனக்குப் புத்ரனுண்டாகவில்லை. இனி நீ கணே ஶனை உபாஸி என ஏகாக்ஷர மந்த்ரத்தை முனிவர் அரச னுக்கு உபதேசித்தார். வேந்தன் பக்தியுடன் விநாயகரை பூஜித்து நற்புத்திரனைப் பெற்றான். ருக்மாங்கதன் என பெயரிட்டு ராஜ்யத்தை அவனிடமளித்து வநம் சென்று விநாயகரை உபாஸித்து, ஆநந்தபுவநம் சென்றான்.

## ருக்மாங்கதன்.

தந்தையைப்போல் ருக்மாங்கதனும் கணேஶ பக்தி யுடன் மநுநீதி தவறாமல் ராஜ்யபரிபாலனம் செய்து வந் தான். ஒரு ஸமயம் வநம் சென்று நீண்ட நேரம் வேட்டை யாடிக் களைத்தான். அருகே **வாசக்ரவி** எனும் ரிஷியின் ஆஶ்ரமத்தை யடுத்து அருந்த நீர் கேட்டான். ஆங்குள்ள முநிபத்னி **முகுந்தா** என்பவள் நீரளித்துத் தன்னை யணைந்து இன்பமூட்டும்படி அரசனை வேண்டினாள்.

ருக்மாங்கதன் திடுக்கிட்டு பயந்து ஓடினன். காமவெறி கொண்ட முகுந்தை அரசனைப் பலாத்காரமாகக் கட்டி யணைத்தாள். அரசன் அவளை உதறித்தள்ள, மன்ன! நீ வெண்குஷ்டமுள்ளவனுவாய் என ஶபித்தாள். குற்ற மற்ற தனக்கு இச்சாபம் வரக்காரணம் யாதென சிந்தை கலங்கி உயிரைவிடப் பிராயோபவேஶம் செய்தான் வேந்தன்.

தற்செயலாக அங்கு வந்த நாரதர் ருக்மாங்கதனை ஸமாதானப்படுத்திக் கூறினர். கதம்ப நகரத்தில் கணேஶ குண்டமென்னும் புண்ய தீர்த்தமிருக்கின்றது. அதனருகே **சிந்தாமணி கணபதி** இருக்கின்றார். அதன் பெருமையை அறியாத ஒரு குஷ்டரோகி அதில் ஸ்நானம் செய்தான். அவனது நோயகன்று அழகான உருவுடன் செல்லக் கண் டேன். தேவேந்த்ரன் கௌதமமுனி வேடம் பூண்டு அஹல்யையின் கற்பைக் கெடுத்தானல்லவா? முனிவர் அவன் உடலெல்லாம் பெண்குறியாகட்டுமெனச்சபித்தார். ஶக்ரன் வெட்கத்தினுல் சிறு உருவமெடுத்துத் தாமரைத் தண்டில் பதுங்கினுன். தேவர் கௌதமரை வணங்கி வேண்ட கணேஶனது அருளால் ஶாபம் அகலுமென்றார். பிருஹஸ்பதி, ஷடக்ஷர கணபதி மந்த்ரத்தை ஶக்ரனுக்கு உபதேசித்தார். அதை பக்தியுடன் ஜபித்து விதர்ப்ப தேசக் கதம்ப நகரம் சென்றான். கணேஶ குண்டத்தில் மூழ்கி சிந்தாமணி கணபதியைப் பல்லாண்டு உபாஸித் தான். விநாயகர் பிரத்யக்ஷமாகி ஶக்ரன் உடலில் இருந்த வைகளை கண்களாகும்படி அருள்புரிந்தார். அவன் ஸ்படிக விநாயக மூர்த்தியைப் பிரதிஷ்டை செய்தான். நீ அங்கு சென்று அவரை உபாஸி என்று நாரதர் கூற அதன்படி விதர்ப்பம் சென்றான்.

ருக்மாங்கதன் நீண்டகாலம் அங்கு விநாயகரை உபா ஸிக்க அவனது நோயகன்றது. தூதர்கள் திவ்ய விமானத் துடன் அங்கு வந்து நீ கணேஶலோகம் வா என அழைத்த னர். பெற்றோருக்கும் இடம் கிடைத்தால்தான் நான் அங்கு ஸந்தோஷமாக இருக்க முடியுமென்றான் அரசன். யார் யாரை நீ ஆநந்தபுவனுக்கு அழைத்துச்செல்ல விரும்புகின் றாயோ அவர்களுக்காக தர்ப்பத்தை இடுப்பில் வைத்துக் கொண்டு கணேஶ குண்டத்தில் முழுகு என்றார் கணேஶ

தூதன். அரசன் அங்ஙனமே பெற்றோருக்காகவும் மற்றோருக்காகவும் ஸ்நானம் செய்து அனைவருடன் முக்தி பெற்றான்.

**க்ருத்ஸமதர் உபாஸித்தது:**—முகுந்தா ருக்மாங்கதனிடம் மனதை வைத்து மூர்ச்சையாகி பூமியில் விழுந்துக் கிடந்தாள். ஆகாய மார்க்கமாகச் சென்ற தேவேந்த்ரன் இதைக்கண்டு அவளது விருப்பத்தை அறிந்து ருக்மாங்கத ரூபமெடுத்து அவளது விருப்பத்தைப் பூர்த்தி செய்தான். அவளுக்கு **க்ருத்ஸமதர்** எனறபுத்ரன் உண்டானான். இது ஒன்றையும் அறியாத வாசக்ரவி தன்புத்ரன் என்றே எண்ணி உபநயநம் செய்து வேதம் கற்பித்தார். கணாநாம்த்வா என்ற கணபதி மஹாமந்த்ரத்தையும் கணபதி பூஜையையும் உபதேசித்தார். அதனால் அவன் ஸகல வேத ஶாஸ்த்ரங்களில் கரைகண்டவனாகவும் மிக்கதேஜஸ்வியாகவும் இருந்தார். **அம்பிகா** என்பவளை மணந்தார்.

விதர்ப்பராஜன் தன்தந்தையின் ஶ்ராத்தத்தன்று ஸகல முனிவர்களையும் அழைத்து தானம்செய்தான். க்ருத்ஸமதர் ஶாஸ்த்ர வாதத்தால் ஸகலரையும் ஜயித்தார். அத்ரிமஹர்ஷி உனக்கு யோக்யதை அபாரமாக இருக்கலாம். ஆனால் நீ பிராம்மணன் அல்ல என்றார். இதைக் கேட்டு அவமானமடைந்த முனிகுமாரன் தாயிடம் சென்று விஷயத்தைக் கேட்டான். தன்னை அறியாத காம விகாரத்தால் அங்ஙனம் நேர்ந்ததென்றாளவள். கோபங்கொண்டு தாயைக் காட்டில், அருகே எவரும் அணுகமுடியாத முள்மரமாவாய் என்று சபித்தார். தாயென்று எண்ணாமல் என்னை சபித்த உனக்கு மிகக்ரூரமான புத்ரன் பிறப்பானென்று மகனைச் சபித்தாள் முகுந்தா.

க்ருத்ஸமதர் வநம் சென்று பத்தாயிர மாண்டுகள் கணேஶனை நாடி கடுந்தவம் புரிந்தார். விநாயகர் அவர் எதிரில் தோன்றி எவருக்கும் கிடைக்காத பிராம்மண ஜன்மாவைத்தந்தேன். எனது பக்தர் உன்னை நினைத்துவிட்டுப் பிறகே என்னைப் பூஜித்தால் விரைவில் ஸித்திபெறுவர். நீ தவம் செய்த இடம் முறையே நான்கு யுகங்களிலும் புஷ்பகம் மணிபுரம் பாநகம் பத்ரகம் எனஅழைக்கப்படும். இங்கு தவம் செய்வோர் விரைவில் தவப் பயனைப்பெறுவர்

என்று கூறி மறைந்தார். அங்கு வரதன் என்ற விநாயக மூர்த்தியை ஸிம்ஹவாஹனத்தில் அமைத்தார் க்ருத்ஸமதர்.

**க்ருத்ஸமத புத்ரன் த்ரிபுரன்:—** க்ருத்ஸமதர் ஏகாந்தமாக அமர்ந்து கணேசனை தியானம் செய்து கொண்டிருந்தார். திடீரென ஒரு தும்பல் உண்டாயிற்று. அவருக்கு. அதிலிருந்து மிக பயங்கரமான சரீரம் உள்ள ஒரு குழந்தை தோன்றி பதிநான்கு லோகங்களும் நடுங்கும்படி கர்ஜித்து முனிவரிடம் வந்தது. அவர் அவனைத் தன் மகன் என்றுஉணர்ந்து தாம் பெற்ற செல்வமான கணநாந்த்வா எனும் மந்த்ரத்தை அவனுக்கு உபதேசித்தார். இதனல் கணேசனை ஆராதி. எண்ணிறந்த ஒப்பற்ற வரன்களைப் பெறுவாய் என்றார். அவன் தபோவனம் சென்று உணவை விட்டு ஒரு காலால் நின்று பதினையாயிரம் ஆண்டுகள் கடுந்தவம் புரிந்தான். விநாயகர் பிரத்யக்ஷமாகி அவன் கேட்டபடி ஸகல தேவர்களும் அவனுக்கு வசமாயிருக்கவும் சக்ரன் தொண்டு புரியவும் அவன் தவம் செய்த இடம் கணேசபுரம் என்று வழங்கவும் வரம் தந்தார்.

இரும்பு வெள்ளி ஸுவர்ணம் இவைகளால் ஆகிய மூன்று நகரங்களும் உனக்கு விமானம்போலிருக்கும். திரிபுரன் எனப் பெயர் பெறுவாய். சிவனது ஒரு சரத்தினல் அடிபட்டபொழுதுதான் உனக்கு மரணம் என்றார். த்ரிபுரன், கணேசபுரத்தில் ஒரு கணேச ஆலயம் அமைத்தான். பூமியில் திக்விஜயம் செய்து அனைவரும் அடிமையாகும்படி செய்தான். ஸ்வர்க்கம் சென்று சக்ரனை ஜயித்துத் தனக்குத் தொண்டுசெய்யும்படி ஏவினன். தன் மநதினல் சண்டன் ப்ரசண்டன் என்ற இருவர்களைப் படைத்தான். பிரும்மாவுடன் போருக்குக் கிளம்ப அவர் விநாயக வரத்தினல் திரிபுரன் பெற்ற பலத்தை அறிந்து ஸத்யலோகத்தை அவனிடம் அளித்துச்சென்றார். அங்கே பிரசண்டனை ப்ரதிஷ்டை செய்துவிட்டு சண்டனுடன் வைகுண்டம் சென்றான்.

விநாயக பக்தியால் அவன் அடைந்த வரத்தை அறிந்த நாராயணன் தனது நாபிகமலத்தில் பிரும்மாவுக்கு இடமளித்து பாற்கடலுக்குச் சென்றார். அங்கு

சண்டனை நாயகனுக்கிக் கைலாஸம் சென்று அம் மலையை இருகரங்களாலும் ஆட்டினான். பார்வதி பயந்து பரமனை அணைந்தாள். அவனது வீர்யத்தைக் கண்டு களித்து உனக்கு என்ன வரம் வேண்டுமென்றார். கைலாஸத்தை எனக்களித்துத் தாங்கள் மந்த்ர மலைக்குச் செல்லுங்கள் என்றான். விநாயகரது மஹிமையால் அவன் பெற்ற பாக்யத்தை உணர்ந்து சிறிதுகாலம் இவன் ஆளட்டும் என கைலாஸத்தை விட்டுவிட்டு மந்த்ரமலை சென்றார். கைலாஸத்தில் தான் தங்கி பதினான்கு உலகிலுமுள்ள தேவாஸுரர் முதலியவர்களை ஆண்டுவந்தான்.

முசுகுந்தையின் ஶாபத்தினால் க்ரூரனான திரிபுரன் ஸாதுக்களை ஹிம்ஸித்து யக்ஞத்தை அழித்து புண்ய தீர்த்தங்களையும் ஆஶ்ரமங்களையும் கெடுத்துவந்தான். இவனைச் சார்ந்தவர்கள் செய்யும் கொடுமையும் பொறுக்க முடியாமல் வருந்தி பிரும்மா விஷ்ணு ருத்ரர்களைச் சரணமடைவோமெனில் அவர்களும் த்ரிபுரனுக்குப் பயந்து வெளிச்சென்றனர். எங்குசென்று எவரைச் சரண் அடைவதென தேவர் வருந்திகொண்டிருந்தனர். ஆபத் பந்துவான நாரதர் அவர்களிடம்வந்து விநாயகர் பெருமையைக் கூறி ஏகாக்ஷர மந்த்ரத்தையும் உபதேசித்து அவரைச் சரணம் அடையும்படிக் கூறினார். தேவர்களும் அங்ஙனமே பகவானை உபாஸித்து ஸங்கஷ்டஹரண அஷ்டகம் என்ற சுலோகங்களால் துதித்தனர். உடனே ப்ரத்யக்ஷமாகி விநாயகர் விரைவில் அவனை அழிப்பதாகக் கூறி மறைந்தார்.

கணேஶர், கலாதரன் என்ற பிராம்மண உருவமெடுத்து திரிபுரனிடம் சென்று அவனைப் போற்றினார். தைத்யேந்த்ர! யான் செல்லாத உலகமில்லை! காணாத தேவாஸுரர் இல்லை! உனது ஸம்பத் ஒப்பற்றது! எவருக்கும் கிட்டாதது! என்றார். இதைக் கேட்டு அக மகிழ்ந்த அஸுரன், உமக்கு என்ன கலைதெரியும்? உமது கலையால் எனக்குள்ள சிறப்பான செல்வத்தைக் காட்டினால் நீர் கேட்ட பொருளைத் தருவேன்! என்றான். விநாயகர் தனது யோகாமஹிமையால் முப்புரத்தைப் படைத்து அவனுக்குக் காட்டினார். மும்மூர்த்திகளின் உலகிலுள்ள

சண்ட பிரசண்டருடன் த்ரிபுரர்களையும் காண்பித்தார். ஸந்தோஷமடைந்த திருபுரன் உமக்கென்ன வேண்டும்? என்றான், கைலாஸத்தில் பரமசிவன் பூஜித்துவரும் விநாயக விக்ரஹத்தைக் கொண்டுகொடு என்றார். இதென்ன கஷ்டம்? சிவன் எனது அடிமை! விரைவில் வரும்! இரும்! என்று கூறி தூதனை அநுப்பி அந்த விக்ரஹத்தை அளி! அல்லது போருக்கு வா! என்றான்.

தான் பூஜிக்கும் விநாயக விக்ரஹத்தைத் தர மனமில்லாமல் பரமசிவன் போருக்குக் கிளம்பினார். குஹன் ப்ரசண்டனையும் நந்தி சண்டனையும் ஶுக்ரன் மந்த்ரியையும் ஜயந்தன் மந்திரி புத்ரனையும் மற்ற சிவகணங்கள் அஸுரர்களையும் எதிர்த்தனர். அஸுரர் பயந்தோடும்படி அடித்து தேவர் வெற்றிகண்டனர். இதைக் கண்டு அடங்கா கோபத்துடன் த்ரிபுரன் தேவஸேனையை அழித்துப் பரமஶிவனோடு போருக்கு வந்தான். இருவருக்கும் பயங்கரமான கடும்போர் நிகழ்ந்தது. இருவரும் பற்பல திவ்ய அஸ்த்ரங்களை வர்ஷித்தனர். அஸ்த்ரத்திற்கு ப்ரத்யஸ்த்ரமளித்தனர். சிவகணங்கள் பயந்து ஶிவனைத் தனியே விட்டு ஓடினர். ஶிவனும் கணேஶன் அருள் தனக்கில்லை என ஸ்வர்ணமலையின் குஹைக்குச் சென்றார். பார்வதியும் அநாதையாகி தந்தையை வேண்டினாள். அவர் ஒருவருமறியாத ஒரு குஹையில் பார்வதியை இருக்கச்செய்தார். திருபுரன் மேருமலையைத் தூக்கிச்செல்ல அதன் அருகே ஓடினான். அம்மலை திடீரென மறைந்துவிட்டது.

ஶிவன் சிந்தை கலங்கி நிற்க நாரதர் அவரை வணங்கித் தாங்கள் போருக்குக் கிளம்பும்போது விக்நேஶரைப் பூஜிக்கவில்லை என நினைவூட்டினார். உடனே பரமஶிவன் தண்டகாரண்யஞ் சென்று விநாயகனை வழிபட்டார். ஐந்துமுகமும் பத்துகையும் பதினைந்து கண்களும் சிரஸில் சந்த்ரனும் கங்கையும் ஒலிக்க ஒரு திவ்ய விக்ரஹத்தைக்கண்டு ஶிவன் ஆஶ்சர்யமடைந்தார். இது யார்? என் உருபோலிருக்கின்றதே! திருபுரனது மாயையோ! என்றார். விநாயகர் ப்ரத்யக்ஷமாகித் தன் மஹிமையைக் கூறி பிரணவமெனும் ஶரத்தால் திருபுரனைக் கொல் என உபதேசித்து கணேஶ ஸஹஸ்ரநாமாவையும் கூறினார்.

# மாஸ விசேஷமும் வ்ருதங்களும்.

கார்த்திகை ஸ்நாநம் 30-நாட்களும் விசேஷ பலனைத்தரும். துலா புராணம்போல் கார்த்திகை புராணமும் விசேஷமாகயிருக்கின்றது. அதைப் படித்து இன்புற வேண்டுகிறோம்.

**1௳ ஸ்கந்த ஷஷ்டி.**— ஸ்கந்தன் அவதாரமாகி சூரனைக் கொன்ற நாள். அன்று உபவாஸமிருந்து அவரை ஆராதித்தால் விரும்பிய பலனைப் பெறலாம்.—ஸ்கந்த பூஜை 8 அணா. ஸ்கந்த ஸஹஸ்ரநாமார்ச்சனை 8 அணா. தபால் சார்ஜ் 12 ந. பை. குருகுலம், W மாம்பலம். T. நகரில் பெறலாம்.

**7௳ துளஸீ விவாஹம்**— பகவான் துளஸீதேவியை மணந்த உத்ஸவம். துளஸியில் நெல்லிக்கிளையை வைத்து விவாஹ உத்ஸவம் கொண்டாட வேண்டும்.—இதன் விபரம் கதை துளஸீ பூஜை என்ற 4 அணா விலையுள்ள குருகுல வெளியீட்டில் காணலாம்.

**10௳ முப்புரத்தை எரித்த நாள்**— மஹாபலிக்கு முக்தி அளித்த நாள். சிவன் ஜ்யோதிர் லிங்கமாக நின்ற நாள். அங்கு எங்கும் தீபம் ஏற்றி க்ஞாநாக்நியால் எரித்த கர்யாபோல், நெல்பொரி நிவேதனம்செய்யவேண்டும். தத்தாத்ரேய அவதார தினமுமாம்.

**19௳ காலபைரவர் தோன்றிய அஷ்டமி**-அந்த பூஜை விசேஷம்.

**30௳ நாக பஞ்சமீ** - நாகங்களுக்குப் பூஜை. புத்தில் பால் தெளிப்பது.

## தார்மிகச் செய்தி.

**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள்** போஜராஜாபோல் பண்டிதர்களுக்கு கநக வர்ஷம் வர்ஷிப்பது பிரஸித்தம். லக்ஷுணந்தம் வேதமறிந்த பண்டிதர்களுக்கு கல் இழைத்த ஸ்வர்ணத்தோடா அளித்தார்கள். ரிக்வேத யஜுர்வேத சுக்லயஜுர்வேத ஸாமவேதமறிந்தவர்களில் சுமார் 108 வித்வான்களைத்தேடி போக வர ரயில்சார்ஜ் கொடுத்து ஸன்மாநம் செய்தனர். இதில் அன்ய மதத்தினர் அந்ய மடத்தவர் என்ற பேதமின்றி அளிக்கப்பட்டது. இதில் ரிக்வேதத்தில் 6, ஸாமவேதத்தில் 18, சுக்லயஜுர்வேதத்தில் 4 மற்றவை கிருஷ்ண யஜுர்வேதிகள். 17 பேர், ஸ்ரீவைஷ்ணவர். மத்வர் 2.

**ஆஸ்தாந வித்வான்கள்:** ஸ்ரீ கிருஷ்ண சாஸ்திரிகள் (ரிக்வேதம்), ஸ்ரீ லக்ஷ்மிநாராயண சாஸ்திரிகள் (யஜுர்) இருவர்களும் ஸன்யாஸம் செய்து கொண்டு ஸித்தியடைந்தனர். ஸ்ரீ போலகம் சுந்தரசாஸ்திரிகள் (ரிக்), காளி ரங்காசாரியார் (யஜுர்) ஸமீபத்தில் பூலோகத்தை விட்டவர். [இத்தகைய ஆஸ்தாந வித்வான்கள் பட்டம் பெற்ற பண்டிதர்களின் பெயர்களை மாதம் கொஞ்சமாக வெளியிடுவோம்.]

**ஸ்ரீ ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதிகள்** மைலை ஸம்ஸ்கிருத காலேஜில் விதிப்படி சாரதா நவராத்ரி பூஜை, பாராயணம், ஹோமம் கன்யா பூஜை முதலியவைகளை மிகச் சிறப்பாக நடத்தினார்கள்.

**ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு** கோயம்புத்தூர் R. S. புரத்தில் நவராத்ரி பூஜையை நடத்தினார்கள்.

---

**பிறர் நோக்கத்தை அறிந்து நடப்பது அது.**

**நமது ஆசிரியர்** சென்னை வேதபாஷ்ய புராணசபையில் ஸ்ரீ லலிதோ பாக்யானம் கூற, லக்ஷார்ச்சனை நடந்தது. டில்லி கரோல்பாக் தென்னிந்திய பஜனை ஸமாஜத்தில் ஸ்ரீ ராமஸ்வாமிசாஸ்திரி பாகவதம் கூற நவராத்ரி நடை பெற்றது. ஸ்ரீராமகிருஷ்ணமடம் இல்லத்தில் ஆசிரியர் நவராத்ரி மஹிமையைப் பற்றி கூறினர்.

**தர்ம சாஸ்த்ர பரிபாலந ஸம்மேளநம்** ஜநாவரம், கோபாலபுரம், மூத்யால்பேட்டை, திருவல்லிக்கேணி முதலிய இடங்களில் நடைபெற்றன.

**தர்பாங்கா மஹாராஜா** ஸம்ஸ்கிருத யூனிவர்ஸிடி வைக்க தன் அரண் மனையையும், தனது ஸம்ஸ்கிருத புத்தகசாலையையும் இலவசமாக அளித்தார். பீஹார் அரசாங்கம் ஸம்ஸ்கிருத யூனிவர்ஸிடி நடத்தும். சாஸ்திரி, ஆசார்யா, மஹோபாத்யாய, மஹாமஹோபாத்யாய முதலிய பட்டமளிக்கும்.

**கீரனூர், குகஸ்ரீ குகானந்தவாரியார் அவர்கள்** நீண்ட காசி யாத்திரை செய்து ஆங்காங்கு உபன்யாசங்கள் செய்து ரிஷிகேசம் சுவாமி சிவானந்த சரஸ்வதியால் நன்கு கவுரவிக்கப்பட்டு, ''பக்தி ரத்ன பிரசார பிரவீண'' என்ற விருதும் பெற்று ஊர் திரும்பியதும் உடன் இலங்கை சென்று மூன்று மாதங்கள் 45 உபந்யாஸங்கள் செய்து 30—10—58 தன் வாசஸ்தலமாகிய கீரனூர் சேர்ந்தார். இவர் தன் பிரசாரத்தினுல் தார்மீக வாழ்வை பிரகாசிக்கச் செய்கிருர். காமகோடி பீடாதிபதி நீண்ட சர்டிபிகேட் கொடுத்து ஆசிர்வதித்துள்ளார்கள்.

## புத்தக அறிமுகம்.

**1. பாரத் க்ரஹ ஸஞ்சாரம்:** மாதாந்தர தமிழ் பத்ரிகை. 48 பக்கம், வருட சந்தா ரூ. 6/-. 17, தேவடிதெரு, மைலாப்பூர். இதன் ஆசிரியர், நம் பத்திரிகையில் ஜோதிஷ பகுதி விஷயம் எழுதும் **E. S. K.** ஸ்வாமி. பிரபல ஜோதிஷர், வேதாந்தி. பாரத பஞ்சாங்க ஆசிரியர், சேஷாத்ரிஸ்வாமிகளின் சிஷ்யர். முக்யமாக ஜோதிஷமும், வேத வேதாந்தமும், புராணம், வைத்யம் முதலிய எண்ணிறந்த விஷயங்களும் வெளி வருகின்றன. பலவகையிலும் பலன்தரும் சிறந்த பத்ரிகை.

**2. பிரும்ம வித்யா:** ஸம்ஸ்கிருதம் தமிழ் ஆங்கிலங்களில் சுத்த அத்வைத விஷயமுள்ள த்ரைமாஸிக பத்ரிகை. ஆசிரியர் பண்டிதராஜ் பிராந்தி யங்கரை பிரும்மஸ்ரீ சுப்ரமண்யசாஸ்திரிகள், **M. O. L.** வருஷ சந்தா ரூ. 5/- 119, தம்புசெட்டிவீதி, சென்னை. ஆசிரியரிடம் கிடைக்கும். — கும்பகோணம் ஸ்ரீ ஆசாரியாளின் அரும் உபதேசமும் இதுவரை வெளிவராத அரிய வேதாந்த விஷயங்களும் உள்ளன. மிக ரஸமான எளிய நடையில் தமிழில் வேதாந்த ஸாரமுமுள்ளது. ஒவ்வொரு வீட்டிலும் இருக்கவேண்டிய பத்ரிகை.

**3. ஹிந்துமத விஞவிடை:** 88 பக்கம், 560 கேள்விகளுக்கு விடையுள்ளது. ஸ்ரீ **P. S.** சுப்ரமண்யஅய்யர், ஆசிரியர். அமரபாரதீ பரீக்ஷா ஸமிதி வெளியீடு. 10 அணு ஸ்டாம்பனுப்பி, 2, ஸ்டேஷன் ரோட், **W.** மாம் பலத்தில் பெறலாம். — ஸர்வ மதங்களுக்கும் ஆதியாய் மாதாவாகவுள்ள இந்து மதத்தின் தத்துவங்களை ஹிந்துக்கள் பூர்ணமாக அறியாததால் அநுஷ்டாநம் சிரத்தை குறைந்தது. ப்ரமாண சுலோகத்துடன் ஹிந்து மதத்தைப்பற்றி தெரிவிக்கும் பொக்கிஷமிது. ஆணும் பெண்ணும் மாணவ மாணவியும் அவச்யம் படிக்க வேண்டிய முக்ய நூலிது.

**4. கணேச ஸஹஸ்ரநாம:** குருகுல வெளியீடு. மூலம் தமிழிலும் நாகரத்திலு முள்ளது. நாமாவுமப்படியே. அருமையான அர்த்தம். விலை அணு 12. குருகுலம், 2, ஸ்டேஷன் ரோடு, மேல மாம்பலத்தில் கிடைக்கும்.

---

***எவ்வளவு ரஸமானுலும் மிதமாகப் பேசு.***

# ஔபாஸந மந்த்ரம்.

ஔபாஸந மென்பது விவாஹதிநம் முதல் இறக்கும் வரை கிருஹஸ்தன் நித்யம் செய்யவேண்டிய அக்நி உபாஸனே. அதை 12நாள் செய்யாவிடில் பிராம்மணத் தன்மை நீங்கிவிடும். ஆரோக்யத்தை ஆதித்யனும் செல்வத்தை அக்நியும் க்ஞாநத்தைச் சிவனும் முக்தியை விஷ்ணுவும் தருவர். ஶ்ராத்தம் முதலிய கர்மாக்களை ஔபாஸந அக்நியில்தான் செய்கிறோம். ஔபாஸநத்தை விடாமல் செய்த நம் முன்னோர் ஸகல ஸம்பத்தையும் பெற்றனர். நித்யகர்மாவான இதை மநப்பாடம் செய்ய வேண்டும். கர்ம காலத்தில் மந்த்ரம் தவருமல் அர்த்தத்தையும் அறிந்து கூறலாம். எந்தெந்த மந்த்ரத்தைக் கூறுகிரோமோ அது அந்த தேவதையைப் பூஜித்ததாகும் என வேதம் கூறுகிறது. ஆதலால் காலை மாலை ஸந்த்யாவந்தநமானவுடன் இதை ஜபித்தால் அக்நி உபாஸனே செய்ததாகும். பகவான் செல்வத்தைத் தருவார். ஆஹ்நிகம் என்ற தலைப்பில் முன் விரிவாக வந்தது இது. மந்த்ரமும் அர்த்தமும் மாத்திரம் இப்பொழுது எழுதுகிறோம்.

ஓம் ஶுக்லாம்......ஶாந்தயே. ஓம்பூ:......ஸுவரோம். மமோபாத்த...... ப்ரீத்யர்த்தம் ப்ராதரௌபாஸநம். (ஸாயம் ஔபாஸநம்) ஹோஷ்யாமி.

பரிஷேசநம்:अदितेऽनुमन्यस्व। अनुमतेऽनुमन्यस्व। सरस्वतेऽनुमन्यस्व देवसवितः प्रसुव (த்யாநம் :) चत्वारि शृंगा त्रयो अस्य पादा द्वे शीर्षे सप्तहस्तासो अस्य। त्रिधा बद्धो वृषभो रोरवीति महोदेवो मर्त्याँ आविवेश ॥ एष हि देवः प्रदिशोऽनु सर्वाः पूर्वो हि जातः स उ गर्भे अन्तः। स विजायमानः स जनिष्यमाणः प्रत्यङ्मुखा

स्तिष्ठति विश्वतोमुखः ॥ प्राङ्मुख देव हे अग्ने मम अभिमुखो भव।

அக்நி அலங்காரம்: इन्द्राय नमः अग्नये नमः यमाय नमः निऋतये नमः वरुणाय नमः वायवे नमः सोमाय नमः ईशानाय नमः [अग्नये नमः जातवेदसे नमः सहोजसे नमः अजिराप्रभवे नमः वैश्वानराय नमः नर्यापसे नमः पङ्क्तिराधसे नमः विसर्पिणे नमः ] இப்படியும் கூறி அக்நிக்கு எட்டு திக்குகளிலும் குங்குமாக்ஷதையால் அலங்கரிக்க வேண்டும். अग्नये नमः என்று சுத்தாக்ஷதையை அக்நியில் போட்டு आत्मने नमः என்று தன் தலைமீதும் सर्वेभ्यो ब्राह्मणेभ्यो नमः என்று ப்ராம்மணர் மீதும் அக்ஷதை போடவும்.

होष्यामि என்று ப்ராம்மணர் உத்தரவு கேட்டு ஒரு ஸமித்தை அக்நியில் வைத்து सूर्याय स्वाहा என்று காலையிலும் अग्नये स्वाहा என்று இரவிலும் பாதியை ஹோமம் செய்து மிகுதியை இரு வேளைகளிலும் अग्नये स्विष्टकृते स्वाहा எனச் சிறிது உரக்கக் கூறி வடபுறத்தில் ஹோமம் செய்யவேண்டும். ஸூர்யாய இதம் நமம-அக்நயே இதம் நமம-அக்நயே ஸ்விஷ்டக்ருதே இதம் நமம என உத்தேசத்யாகம்.

अदितेऽन्वमंस्थाः । अनुमतेऽन्वमंस्थाः सरस्वतेऽन्वमंस्थाः ॥ देव सवितः प्रासावीः என உத்தர பரிஷேசனம் स्वाहा என ஒரு ஸமித்தை வைத்து अग्न्युपस्थानं करिष्ये என எழுந்து கூறுக.

अग्ने नय सुपथा राये अस्मान् विश्वानि देव वयुनानि विद्वान्।
युयोध्यस्मज्जुहुराणमेनो भूयिष्ठां ते नम उक्तिं विधेम ॥

---

ரஸமாகக் கேட்கிறீர்களா என கவனி.

अग्नये नमः நமஸ்காரம் செய்து அபிவாதயே கூறுக.

मन्त्रहीनं क्रियाहीनं भक्तिहीनं हुताशन ।
यद्‌हुतं तु मया देव परिपूर्णं तदस्तु ते
प्रायश्चित्तान्यशेषाणि तपःकर्मात्मकानि वै ।
यानि तेषामशेषाणां कृष्णानुस्मरणं परम् । श्रीकृष्ण कृष्ण कृष्ण
एतत्कर्मसमृद्ध्यर्थं अनाज्ञातादिमन्त्रत्रयजपं करिष्ये ।

अनाज्ञातं यदाज्ञातं यज्ञस्य क्रियतेमिथु । अग्ने तदस्य कल्पयत्वँ हि वेत्थ यथातथम् । पुरुषसंमितो यज्ञो यज्ञः पुरुषसंमितः । अग्ने तदस्य कल्पय त्वँ हिवेत्थ यथातथम् ।

यत्पाकत्रा मनसा दीनदक्षा न यज्ञस्य मन्वते मर्तासः । अग्निष्ट्‌होता क्रतुविद्विजानन् यजिष्ठो देवाँ ऋतुशो यजाति ।

बृहत्साम क्षत्रभृत् वृद्धवृष्णियम् त्रिष्टुभौजः शुभित मुग्रं वीरं । इन्द्रस्तोमेन पञ्चदशेन मध्यमिदं वातेन सगरेण रक्ष ।

ஔபாஸந விபூதியை ரக்ஷையாக அணியவும்.

பரிஷேசனம்: அதி[3]தேநு மன்யஸ்வ-அநுமதேநு மன்யஸ்வ - ஸரஸ்வதேநு மன்யஸ்வ - தே[3]வஸவித; ப்ரஸுவ.

த்யாநம் : சத்வாரி ஶ்ருங்க[3]ா த்ரயோ அஸ்ய பாதா த்[3]வே ஶீர்ஷே ஸப்த ஹஸ்தாஸோ அஸ்ய | த்ரித[4]ா ப[3]த்தே[4]ா வ்ருஷபோ[4] ரோரவீதி மஹோ தே[2]வோ மர்த்யாகும் ஆவிவேஶ ‖ ஏஷஹிதே[3]வ: ப்ரதி[3]ஶோ நு ஸர்வா: பூர்வோ ஹி ஜாத: ஸஉக[3]ர்பே[4] அந்த: | ஸவிஜாயமாந: ஸஜநிஷ்யமாண: ப்ரத்யங்முகா[2]; திஷ்டதி விஶ்வதோ முக;[2] ‖

---

தாக்ஷிண்யத்திற்காகக் கேட்டால் பேச்சை நிறுத்து.

ப்ராங்முக² தே³வ ஹே அக்³நே மம அபி⁴முகே²ாப⁴வ: (**அலங்காரம்**) இந்த்ராய நம: அக்நயே நம: யமாய நம: நிருருதயே நம: வருணாய நம: வாயவே நம: ஸோமாய நம: ஈஶாநாய நம: [அக்நயே நம: ஜாதவேத³ஸே நம: ஸஹௌஜஸே நம: அஜிரா ப்ரப⁴வே நம: வைஶ்வாநராய நம: நர்யாபஸே நம: பங்க்திராத⁴ஸே விஸர்ப்பிணே நம: இப்படி சிலர்.] அக்நயே நம: ஆத்மநே நம: ஸர்வேப்⁴யோ ப்ராஹ்மணேப்⁴யோ நம: – ஹோஷ்யாமி. [ஜுஹுதி] ஸூர்யாய ஸ்வாஹா (காலை) அக்நயே ஸ்வாஹா (மாலை) இரண்டு வேளையும் அக்நயே ஸ்விஷ்டக்ருதே ஸ்வாஹா ஸூர்யாய இதம் நமம அக்நயே இதம் நமம. அக்நயே ஸ்விஷ்டக்ருதே இதம் நமம. (**பரிஷேசநம்**) அதி³தேந்வ மக்கு³ஸ்த²ா: । அநுமதேன்வ மக்கு³ஸ்த²ா: ஸரஸ்வதேன்வ மக்கு³ஸ்த²ா: ॥ தேவ ஸவித: ப்ராஸாவீ: ஸ்வாஹா- அக்நி-யுபஸ்தானம் கரிஷ்யே (எழுந்து நின்று) அக்நே நய ஸுப த²ாராயே அஸ்மான் விஶ்வாநி தே³வ வயுநாநி வித்³வான் । யுயோத்⁴யஸ்மஜ் ஜுஹுராணமேநோ பூ⁴யிஷ்ட³ாம்தே நம உக்திம் விதேம ॥

அக்நயே நம: நமஸ்காரம், அபிவாதயே கூறுக. மந்த்ர ஹீநம் க்ரியாஹீநம்—பக்⁴திஹீநம் ஹுதாஶந । யத்ஹுதந்து மயாதேவ பரிபூர்ணம் தத் அஸ்துதே । ப்ராயஶ் சித்தாநி அஶேஷாணி - தப: கர்மாத்மகாநிவை । யாநிதேஷாம் அஶேஷாணாம் கிருஷ்ணாநுஸ்மரணம் பரம் । க்ருஷ்ண க்ருஷ்ண க்ருஷ்ண.

ஏதத் கர்ம ஸம்ருத்⁴யர்த்தம் அநாக்ஞாதாதி³ மந்த்ர த்ரய ஜபம் கரிஷ்யே (முன் ஸ்லோகத்திலே இக்கருத் திருப்பதால் சிலர் இதை செய்வதில்லை.)

அநாக்ஞாதம் யத³ாக்ஞாதம் யக்ஞஸ்ய க்ரியதேமிது 1
அக்நே தத³ஸ்ய கல்பய த்வகு³ம்ஹிவேத்த² யதா²தத²ம் ॥

புருஷஸம்மிதோ யக்ஞோ யக்ஞ: புருஷஸம்மித: ।
அக்நே தத³ஸ்ய கல்பய த்வகும் ஹி வேத்த²யதா தத²ம் ॥

யத்பாகத்ரா மநஸா தீ³நத³க்ஷாந யக்ஞஸ்ய மன்வதே மர்தாஸ: । அக்³நிஷ்டத்தோதா⁴ க்ரது வித்³விஜாநன் யஜிஷ்டே²ா தே³வாகு³ம் ருதுஶோ யஜாதி. ॥

---

**பிறருக்கு இடஞ்சல் இல்லையா என கவனி.**

ரக்ஷா-ப்ருஹத்ஸாமக்ஷத்ர ப்[4]ருத்வ்ருத்த[4] வ்ருஷ்ணியம் த்ரிஷ்டு பெ[4]ளஜ: ஶுபி[4]த முக்[3]ர வீரம் । இந்த்[3]ரஸ்தோமேந பஞ்சத[3]ஶேந மத்[4]ய மித[3]ம் வாதேந ஸக[3]ரேண ரக்ஷ ||

---

1 **பரிஷேசந மந்த்ரார்த்தம் :—** ஓ அதிதி தேவியே, அநுமதியே, ஸரஸ்வதியே, ஸவித்ருதேவனே அக்நியில் ஹோமம் செய்ய அநுமதி தாருங்கள். பின் பரிஷேசநார்த்தம். உத்தரவு கொடுத்தீர்கள் என்பதாம்.

2 **த்யாந அர்த்தம் :—**யக்ஞ புருஷ! 4 ரித்விக்குகள் உமக்கு கொம்புபோலாம் 3 ஸவநங்கள் பாதங்கள், யஜமாநன் பத்நீ என்ற 2 தலைகள். காயத்ரீ முதலிய 7 சந்தஸ்ஸுகள் கைகள். 3 வேதங்களால் கட்டப்பட்டிருக்கிறீர், இஷ்டத்தை வர்ஷிக்கின்றீர். ஸ்தோத்ர ஶஸ்த்ரங்களால் காளைபோல் கர்ஜிக்கிறீர். பெரிய தேவஸ்வரூபி. மநிதர்களிடத்தில் தங்கியிருக்கின்றீர். யக்ஞம் என்பது பகவத் ஸ்வரூபமும் பகவதாராதநரூபமுமாம்.

அக்நியிலேயே யாகம் நடப்பதால் அக்நியையே யக்ஞமாக வேண்டுகிறோம். இந்த ப்ரகாஶமான பரமாத்மா எல்லா திக்குகளிலும் வ்யாபித்திருக்கிறார். பிரும்மாண்ட கர்ப்பத்தின் உள்ளே முதலிலே ஹிரண்யகர்ப்பராகத் தோன்றினார். அவர் இதுவரை உண்டான பிராணிகளாகவும் இனி உண்டாகப்போகின்றவர்களாயும் இருக்கிறார். எங்கும் முகமுள்ள இவர் ஒவ்வொருவரிடமும் ப்ரத்யகாத்மாவாக இருக்கிறார்.

முன் யக்ஞரூபியாகக் கூறியது மந்த்ரம். இது பரமாத்ம ஸ்வரூபியாகக் கூறுகிறது.

எனக்கு எதிர்முகமாக இரும் என்று கூறி 8 திக்பாலர்கள் பெயரைக் கூறி அக்நிக்கு அலங்காரம் செய்ய ஸூர்யனுக்கு—அக்நிக்கு—ஸ்விஷ்டக்ருத் எனும் அக்நிக்கு இதை ஹோமம் செய்கிறேன் என்றுசெய்து, ஹோமப் பொருள் அவர்களுக்கே, என்னுடையதல்ல என்ற ஸூர்யாய இதம் நமம, அக்நய இதம் நமம, அக்நயே ஸ்விஷ்டக்ருதே இதம் நமம எனக்கூறவேண்டும். இரு வேளைகளிலும் இரண்டாம் ஹோமம் ஸ்விஷ்டக்ருத் ஆகும்.

---

**பிறருக்குப் பிடித்த ஆடைகளை அணிந்து செல்.**

பரிஷேசநமான பின் ஸ்வாஹா என அக்நியில் ஸமித்தை வைத்து அக்நே என்கிறோம். ஓ அக்நியே ! நீர் எல்லா வழிகளையும் அறிந்தவர். நல்லவழியில் எங்களுக்குப் பொருள் வரும்படிச்செய். இதற்கு ப்ரதிபந்தகமாகவுள்ள குடிலமான பாபங்களை விலக்கும். உமக்கு அநேக நமஸ்காரம் கூறுகிறோம். மந்த்ரம், க்ரியை, பக்தி, ஆகியவை குறைந்திருந்தாலும் அக்நியே அதை பூர்ணமாக செய்யும். தபஸ், கர்மா முதலிய ஸகல ப்ராயஶ்சித்தங்களை விட க்ருஷ்ணனை நினைப்பதே உயர்ந்தது.

**அநாக்ஞாத அர்த்தம்:** அக்நியே-யக்ஞத்தின் அங்கங்களில் சிலதை அறியோம். சிலதை அறிவோம். ஆதலால் தவறுதல்கள் செய்யக்கூடும். அதை எப்படிச் செய்ய வேண்டுமென நீர் அறிவீர்? ஆதலால் அதைச் சரியாகச் செய்துகொள்ளும். யக்ஞமானது புருஷனைப்போல் ஸர்வ அவயவமும் நிறைந்தது. புருஷனால் அது நன்றாக அமைக்கப்பட்டது. அதை நீர் அறிவதால் நாங்கள் செய்ததை சரியாகச் செய்யும். யக்ஞம் செய்யும் யஜமாநர்களான மனிதர்கள் குழந்தைகள்போல் ரக்ஷிக்கத்தக்கவர். உத்ஸாஹமில்லாதவர். மநதினால் எல்லாம் அறியத்தக்கவரல்ல. தாங்கள் ஸகல யாகத்தையுமுணர்ந்தவர். யாகம் செய்ய ஸாமர்த்ய முள்ளவர். தேவர்களை அழைப்பவர். அத்தகைய அக்நி அந்தந்த காலத்தில் தேவர்களுக்கு நாங்கள் செய்த ஹோமத்தை ஸமர்ப்பிக்கட்டும். நாம் ஏதேனும் தவறுசெய்தால் அதை அகற்றி நாம் செய்யும் கர்மாவை சரியாகச் செய்யட்டுமென வேண்டுகிறோம்.

**ரக்ஷாதாரண அர்த்தம்:** அரசன் போன்ற பலமுள்ளதும் புருஷத்தன்மையை விருத்திசெய்வதும் பலமளிப்பதும் ஶோபை உள்ளதும் ஸத்புத்ரனை அளிப்பதுமான பிருஹத்ஸாம த்ரிஷ்டுபுடன் கூடி நம்மை ரக்ஷிக்கட்டும். பஞ்சதஶமென்னும் ஸ்தோமத்துடனும் ஸகரமெனும் காற்றுடனும் கூடி சென்றவர்களும் வரப்போகின்றவர்களுமான என் ஸந்ததியின் நடுவிலுள்ள என்னை ரக்ஷிக்கட்டும்.

---

**பஞ்சகச்சமின்றி குரு, பெரியோரை அணுகாதே.**

# ஸ்த்ரீ தர்மம்.

## கௌஸல்யா ஸீதா ஸம்வாதம்.

ஸீதா: கௌஸல்யை நமஸ்கரித்து சிறித்த முகத்துடன் அம்மா நான் போய் வருகிறேன் என்ருள்.

கௌஸல்யா: இருகரங்களாலும் ஸீதையை இருகத் தழுவி அம்மா அப்படியே செய். சில வார்த்தைகளைச் சொல்லலாமா என யோசிக்கிறேன்.

ஸீ: யோசிப்பதென்ன? நீங்கள் தாயல்லவோ?

கௌ: அம்மா! உலகிலே சில அஸத்து ஸ்த்ரீகள் உண்டு. பர்த்தா ஸதா அவர்களை ஆடை ஆபரணங்களாலும் மற்ற இனிய பொருள்களாலும் ஆராதித்திருந்தாலும் பதிக்குக்கஷ்டம் வந்தகாலத்தில் அவரைக் கைவிடுவார்கள்.

ஸீ: நல்ல ஸ்த்ரீகள் அப்படிச் செய்வார்களா? அஸத்துகள்தான் அப்படி செய்யும். ஏனப்படி அவர்களுக்கு அந்த புத்தி.

கௌ: அது அவர்கள் இயற்கை குணம். ரொம்ப ரொம்ப ஸுகத்தை அனுபவித்தாலும் ஸ்வல்ப ஆபத்து வந்தால் கூட போதும் உடனே பதியைக் கை விடுவார்கள்.

ஸீ: அம்மா! என்னை அஸத் ஸ்த்ரீகள் கோஷ்டியில் சேர்க்கவேண்டாம். சந்திரனை விட்டு பிரபை விலகாததுபோல் தர்மத்தைவிட்டு ஒரு க்ஷணமும் நான் விலகி இருக்க மாட்டேன். பதியே என் பிராணன். தந்தி இல்லாமல் வீணை வாசிக்குமா? சக்ரமில்லாமல் வண்டி ஓடுமா? நூறுபிள்ளைகளைப் பெற்றிருந்தாலும் பதி இல்லாவிடில் ஸுகமேது? கணக்கில்லாத இஹபரஸுகத்தைத்தரும் புருஷனை யார் அவமதிப்பாள்.

கௌ: அம்மா ஸீதே! நான் உன்னை நன்கு அறிவேன். எனது புத்ர பாஸத்தாலும் குழந்தை ஏழையாய் விட்டானே என்ற துக்கத்தாலும் கூறுகிறேன்.

ஸீ: எவ்வளவு தெரிந்திருந்தாலும் பெரியோர் கூறத்தான் வேண்டும். சிறியவர் கேட்கத்தான் வேண்டும். கூறுங்கள் தாராளமாக.

---

கௌ : என் குழந்தை எதையேனும் நினைத்து மநம் கலங்கி நின்ருல் நீயும் கலங்கி அவனுடன் அழாதே. ஸித்த ஓஷதி போல் அவன் மநதைத் தெளிவடைய செய். அவனுக்கு ஹிதமாகப் போதி. ஆனுல் அவருக்கு ஒன்றும் தெரியாதென நினைக்காதே ?

ஸீ : அப்படியே ஆகட்டும். பிறகு.

கௌ : இங்கு என் குழந்தைக்கு எண்ணிறந்த தோழர்கள் உண்டு. அவர்களுடன் விளையாடிக் களிப்பான். லக்ஷ்மணன் அண்ணுவைப் பிதாபோல் கருதி பக்தி செய்வான். நீதான் தோழிபோலிருக்கவேண்டும்.

ஸீ : அப்படியே நடக்கிறேன். அப்புறம்

கௌ : அவன் அக்நி பூஜை செய்யும் போது உத்தம பத்நி யாக இருந்து பணிவிடை செய். என் குழக்தைக்கு அங்கு எந்த வேலைக்காரன் இருக்கிருன் ?

ஸீ ; அம்மா! கலங்காதீர். நான் வேலைக்காரியாக இருந்து ஸகல கார்யங்களையும் செய்கிறேன்.

கௌ : என் குழந்தை மஹா வீரன்! யுத்தத்திற்கு அஞ்ச மாட்டான். அவன் யுத்தத்திற்குப் போகும்போது ஐயோ! ஸேனையில்லையே! தனியாக போகலாமா? என்று கூருதே. சிறந்த க்ஷத்ரிய ஸ்த்ரீயாக இருந்து தைர்யமாகப் போருக்கனுப்பு. அது நமது ஸ்வதர்மமாகும்.

ஸீ ; பெற்றதாயே கூறும்போது நான் தடை செய் வேனு ? பிறகு சொல்லுங்கள்.

கௌ : தேவ பூஜை பிராம்மண பூஜை முதலியன செய் யும்போது நீ சிஷ்யனைப் போலிருந்து மேலே மேலே பொருள்களை எடுத்தளிக்க வேண்டும்.

ஸீ : அது எனக்கும் புண்யமல்லவா ? அவஶ்யம் செய்கிறேன்.

கௌ : நீ தனியாக ஒரு புண்யம், பூஜை, ஜபம், விரதம் செய்யவேண்டாம். பதி செய்யும் பொழுது பணி விடை செய்தாலே புண்யம் வரும்.

ஸீ : அதுதான் கற்பென்பது. அதனுல் எவ்வளவோ கார்யம் ஸாதிக்கலாமே! தவத்தால் செய்ய முடி யாததைக் கற்பினுல் செய்யலாமே! நமஸ்காரம் போய் வருகிறேன்.

---

**பின்னல் நுனியில் மயிர்விரித்திருத்தல்**

# ஸ்ரீ சங்கர உபதேச ரத்னம்.

**விவேக சூடாமணி** (ஐப்பசி மாதத் தொடர்ச்சி)

**தா**னே ப்ரும்மா. விஷ்ணு இந்த்ரன். இந்த உலகெலாம் தானே. தானே உள்ளும் வெளியும். தானே எதிரிலும் பின் புறமும் தானே. தென்புறமும் வடபுறமும் தானே. மேலும் கீழும் தானே.

அலை நுரை சுழல் குமிழி முதலிய எல்லாம் ஜலமேயாம். அதேபோல் உடல் முதல் அஹங்காரம் வரையிலுள்ள எல்லாம் சுத்தமான சித்ரூபமேயாகும்.

உலகெலாம் ஸத். அதைத்தவிர மற்றவை அஸத். மண்ணைத்தவிர வேறுளது பானை என்பவன் ப்ராந்தனே.

ஸத்தில் உலக கல்பனை அக்ஞானத்தால் தோன்றியது. அதை அகற்ற, இரண்டாவது வஸ்து இல்லை என ஶ்ருதி கூறுகிறது.

ஆகாஶம்போல் நிர்மலம். விகல்பமற்றது. எல்லை, அசைவு, மாறுதல் இல்லாதது. உள்ளும் புறமும் ஶூன்யம், அத்வயமான வஸ்து நான் என்ற அநுபவம் வந்த பின் அறியத்தக்கது வேறென்ன ?

ஜீவனே பிரும்மம். பிரும்மமே உலகாகத் தோன்றியது ஆதலால் "பிரும்மைவாஹம்" என்று நினை. பிரும்மமாவாய். வேதங் கூறியபடி பஞ்சகோஶங்களும் நானல்ல என எண்ணு. பிணம் போன்ற உடலை நான் என்று நினைத்தால் ஜநந மரணம் முதலிய துன்பம் உண்டாகும்.

ஆத்மா நிர்விகாரன். நிராகாரன். அங்கு பேதமேது? இருள் என்பது தேஜஸில் லயமாகிறது. அக்ஞாநம் பிரும்ம ஸ்வரூபத்தில் லயமாகிறது.

ஶுத்த பிரும்மத்திடம் முக்காலத்திலும் உலகம் இல்லை. அது மாயா மாத்ரமே. அத்வைதமே பரமார்த்தமாகும்.

---

**பெண்கள் கச்சமில்லாவிடில் பிராம்மணராக தோன்ருது.**

மநதினுல்தான் கல்பனை ஏற்படுகிறது. மநதை பிரும்மத்தினிடம் லயம் செய். அதே ஸமாதியாகும். அத்தகைய ஸமாதியிலுள்ள வித்வானே ஆத்மா, ஶுத்தன், அத்வயன் என அறிவான். பந்தத்தை அறுத்து பிறவியைப் பயனுள்ளதாகச் செய்வான்.

ஸமாதியிலமர்ந்து பிரும்மத்தை அநுஸந்தாநம்செய். சாப்பிட்டுக் கக்கிய பொருளைப்போல் மறுபடி விஷயங்களை நினைக்காதே.

ப்ராரப்தத்தால் உண்டான உடல் இருந்தால் இருக்கட்டும் அழிந்தால் அழியட்டும். ஆநந்தாத்ம ஸ்வரூபத்தில் லயி. ஸித்தி பெற்ற ஜீவன் முக்தன் உள்ளும் புறமும் ஸதா ஆநந்தத்தை அநுபவிப்பான்.

வைராக்யத்தின் பலன் அறிவு. அறிவின் பலன் உபரதி. உபரதியின் பலன் ஆநந்தாநுபவம்.

அக்ஞாநத்தால் தோன்றிய ஹ்ருதயக்ரந்தி அகன்ருல் இச்சை கார்ய ப்ரவ்ருத்தி முதலியன தானேஅகலும். வைராக்யத்தின் பரம எல்லை வாஸனை தோன்ருமையே. அறிவின் சிறந்த எல்லை அஹம்பாவம் தோன்ருமையே.

வெளி விஷயங்களை விட்டு ஸதா ப்ரும்ம வடிவமாக நின்று உலக போகத்தை ஸ்வப்நம்போல் கருதுபவன் அபூர்வமான ஒருவன். அவனே தன்யன். அவனே மான்யன்.

பிரும்மம் ஆத்மா இவைகளை நன்கு சோதித்து இரண்டும் ஒன்றென அறிந்து நிர்விகல்பமாக இருப்பதே ப்ரக்ஞையாம். அதிலிருப்பவனே ஸ்திதப்ரக்ஞனுவான்.

நல்லறிவு, இடை விடாத ஆநந்தாநுபவம், உலகம் மறப்பது, புத்திலயிப்பது, விழித்திருந்தும் விழிக்காமை, வாஸனை இல்லாத போதம், ஸம்ஸாரமில்லாமை, சிந்தையில்லாத சித்தம், முதலியன உள்ளவனே ஜீவன் முக்தனுவான்.

---

**அந்தந்த இடத்திற்கேற்ற ஆடைவேண்டும்.**

# பால பாரதம்.

**யக்ஷப்ரஶ்நம்.** (ஐப்பசிமாதத் தொடர்ச்சி.)

**யக்ஷன்:** பிராம்மண்யம் எதனுல் ஸித்திக்கின்றது?

**தர்மர்:** நல்லொழுக்கத்தை அதாவது ப்ராம்மணனுக்கேற்ற ஆசார அநுஷ்டாநங்களைக் கைக்கொள்வது ஒன்றினுல்தான் ப்ராம்மண்யம் ஸித்திக்கும். வேதம் ஶாஸ்த்ரம் இவைகளில் வாதம் செய்து கொண்டிருப்பவர் வீண் வேலையில் ஈடுபட்டவராவர். கர்மா செய்பவனே பண்டிதன். நாலு வேதமோதியிருந்தாலும் கர்மாநுஷ்டான மில்லாதவன் கெட்டசெயலுள்ளவன். மற்றவர்ணத்தாரை விட மோசமானவன். அக்நிஹோத்ரம் செய்பவனே அடக்கமுள்ளவனே ப்ராம்மணன் ஆவான்.

**ய:** யார் ஸந்தோஷமடைபவன்?

**த:** கடனில்லாமல் ஒருவரையும் யாசிக்காமல் கிடைத்தது போதும் என கிடைத்தபொருளைக் கொண்டு பாகம் செய்து உண்பவன்.

**ய:** ஆஶ்சர்யமானது எது?

**த:** நித்யம் பிராணிகள் இறந்துகொண்டிருக்கின்றன. அதைப் பார்த்துப் பாக்கியுள்ளவர் தங்களை ஸ்திரமானவர் என எண்ணுவதே ஆஶ்சர்யம்.

**ய:** என்ன வ்ருத்தாந்தம்?

**த:** தர்க்கம் நிலையில்லாதது. வேதமோ பல. பிரமாணத்தைக் கூறுபவர் பலரிஷிகள். தர்மத்தின் தத்வம் மிக ரஹஸ்யமானது. மஹாஜநம் (சிஷ்டர்) சென்ற வழியே பின்பற்றத் தக்கது.
மஹாமோஹமெனும் ஸம்ஸாரத்தில் ஸூர்யன் எனும் தீயால் பகலிரவு எனும் விறகால் மாஸம், ரிது என்ற கரண்டியால் மசித்து காலம் பிராணிகளைப்பாகம் செய்கிறது என்பதே.

**ய:** புருஷன் என்பவன் யார்?

---

**பழைய ஆசாரமே ஆசார்யருக்குப் பிடித்தது.**

த: புண்ய கர்மாவால் நல்ல பெயர் இவ்வுலகிலும் மறு உலகிலும் எதுவரை இருக்கிறதோ அதுவரை ஒருவன் புருஷனுவான்.

ய: தர்ம! எனது கேள்விகளுக்கு மிக நன்ருக பதில் கூறிஞய். ஆதலால் உனது ஸஹோதரர்களில் ஒருவனை எழுப்புகிறேன். யார் வேண்டும்?

த: ஆனுல் நகுலனை எழுப்பும்.

ய: மிக்க பலிஷ்டனுன பீமனையும் சிறந்த வில்லாளி யான உன்ஸஹோதரர் அர்ஜுநனையும் விட்டு விட்டு உன்தாயின் சக்களத்தி மகனை ஏன் விரும் புகிருய்?

த: தர்மமே தலைகாக்கும். எனக்கு பீமார்ஜுநர் மிக ப்ரியமானுலும் குந்தியின் மூத்தபுதல்வனுன நான் ஜீவித்திருக்கிறேன். அதேபோல் மாத்ரியின் மூத்த குமாரனை ஜீவிக்கச்செய்வது தர்மம்,

ய: தர்ம! உனது ஒப்பற்ற தர்மத்தைக் கண்டுகளித் தேன். உமதுஸகோதரர் நால்வருமே ஜீவிக்கட்டும் [என எழுப்பிற்று]

த: மிக்க ஸந்தோஷம்! தாங்கள் ஒரு பக்ஷியல்ல. தேவராக இருக்கவேண்டும். தாங்கள் யார்?

ய: தர்ம! நான் உனது தந்தையான தர்மதேவன். உன்னைப் பரீக்ஷிக்கவே இவ்வுருவுடன் வந்தேன். வேண்டிய வரங்களைக் கேள்?

த: அரணி இல்லாவிடில் அக்னி ஹோத்ர தர்மமில்லை, ஆதலால் முதலில் மான்தூக்கிச்சென்ற அரணி கிடைக்கட்டும். கௌரவர் கூறியபடி 12 ஆண்டு கள் வநவாஸம் முடிந்தது. 13வது ஆண்டில் மறைந் திருந்து வஸிக்கவேண்டும். அச்சமயம் ஒருவ ரும் அறியாதபடி அருள் புரியும்.

ய: யக்ஷன் அரணியைத் தந்து அக்ஞானவாஸ வரத் தையும் தந்து மறைந்தார்.

**வநபர்வா முற்றிற்று.**

---

**அநாசாரத்துடன் ஆசார்யரை அணுகாதே.**

# சாந்தி விலாஸம்.

( ஸ்ரீ கணபதி தீக்ஷிதர்.)

5. दाराः पुत्राः परमसुहृदः बान्धवाः किंकरावा
स्वप्नावस्थास्वपि च विरहं येमया न क्षमन्ते ।
अत्यासन्ने तपन तनयस्याज्ञया दूतवर्गे
तेष्वेकोपि स्मरहर न मे गन्तुं अन्वस्ति जन्तुः ॥

தாரா: புத்ரா: பரம ஸுஹ்ருத: பாந்தவா: கிங்கராவா
ஸ்வப்நாவஸ்தா ஸ்வபிச விரஹம் யே மயா நக்ஷமந்தே।
அத்யாஸன்னே தபந தநயஸ்யாக்ஞயா தூதவர்கே
தேஷ்வேகோபி ஸ்மரஹரநமே கந்து மந்வஸ்திஜந்து: ॥

ஓ ஸ்மரஹர! மனைவி புத்ரர் சிறந்த மித்ரர் பந்து வேலைக்காரன் ஆகிய இவர்களைக் கனவிலும்கூட விட்டுப்பிரிய மநமில்லாதிருந்தேன். யமதர்மனின் உத்திரவுப்படி யமகிங்கரர் வந்து என்னை அணுகும் பொழுது இவர்களில் ஒருவர்கூட என் பின்னே வருவதில்லையே! உங்களை பக்தியுடன் தரிசித்திருந்தால் அது கைவிடுமா?

6. राज्ञो भृत्या यदि परिचिता देशिकस्यैषलाभः
राजद्वारे यदि खलु गतं नैमिशं तत्प्रविष्टम् ।
राजा दृष्टोऽथ चयदिपरं ब्रह्मसाक्षात्कृतन्तत्
त्यक्तो देहो यदि नृपकुले मादृशां सोऽपवर्गः ॥

ராக்ஞோ ப்$^{4}$ருத்யா யதி$^{3}$ பரிசிதா தே$^{3}$ஶிகஸ்யைஷலாப:$^{4}$
ராஜத்$^{3}$வாரே யதி$^{3}$க$^{2}$லுக$^{3}$தம் நைமிஶம் தத்ப்ரவிஷ்டம்
ராஜாத்$^{3}$ருஷ்டோऽத$^{2}$சயதி$^{3}$பரம் ப்ரஹ்ம ஸாக்ஷாத் க்ருதம்தத்
த்யக்தோதே$^{3}$ஹோயதி ந்ருபகுலே மாத்ருஶாம் ஸோபவர்க:

அரசனுடைய வேலைக்காரர்கள் போன்றவர்களிடம் நட்பு உடையவர்களாக இருந்தால் இதுவே ஸகல ஶாஸ்த்ரங்களையும் உபதேசம் செய்யும் உபாத்தியாயருடைய லாபமென்றும், அவர்களின் நட்பால் அரண்மனைக்குள் நுழைவதே நைமிஶாரண்யமடைந்ததாகவும், அரசனை நேரில் பார்ப்பதே பரப்ருஹ்மத்தைப் பார்த்ததாகவும், அரசன்வீட்டில் தேகத்தை விட்டுவிடுவதே மோக்ஷ

---

தோரணம்போல் புஷ்பம் தரித்தல்

மாகவும் எண்ணி மிகவும் சந்தோஷப் படுகிறோமே தவிர நமது நன்மைக்குக் காரணமான ப்ரும்ம விசாரம் செய்வதில்லையே!

7. यत्तीर्थानामटनमथ यत्पूजनं दैवतानां
इष्टापूर्तव्यसनमपि वा यच्च दाक्ष्यं कलासु ।
अर्थप्राप्त्यौपयिक मखिलं जायते मादृशां तत्
तेचाप्यर्था धरणि शरणा भूमिभृत्सात्कृता वा ॥

யத்தீர்தா²நாமடநமத² யத் பூஜனம் தே³வதாநாம்
இஷ்டாபூர்த்த வ்யஸனமபி வாயச்ச தா³க்ஷ்யம்கலாஸு
அர்த²ப்ராப்த்யௌபயிக மகி²லம் ஜாயதே மாத்³ருஶாந்தத்
தேசாப்யர்தா² த⁴ரணி ஶரணாபூ⁴மிப்⁴ருத்ஸாத்க்ருதாவா ॥

புண்ய தீர்த்தங்களுக்குப் போவதும் தேவதைகளைப் பூஜிப்பதும் வேள்விகள் செய்யவேண்டுமென்றும் குளம் ஏரி முதலியவைகளை வெட்ட வேண்டுமென்றும் மிகவும் ஆவல் அடைவதும் சாஸ்திரங்களில் கெட்டிகாரத்தன்மையும் இன்னும் மற்றுமுள்ள எல்லா நற்காரியங்களும் என்னைப்போன்றவர்களுக்கு பணத்தை ஸம்பாதிப்பதற்கே உதவுகின்றன. அப்பணம் பூமியில் புதைக்கப்பட்டோ அல்லது அரசர் அதீனமாகவோ ஆகிறது. இந்த நற்காரியங்களுக்கு சொந்தப் பணத்தைக்கொண்டே பணம் சம்பாதிக்க எண்ணுகிறோம்.

8. आकौमाराद्गुरुचरण शुश्रूषया ब्रह्मविद्या
स्वास्थायास्था महहमहती मार्जितं कौशलं यत् ।
निद्राहेतोर्निशिनिशि कथाः श्रृण्वतां पार्थिवानां
कालक्षेपौपयिक मिदमप्याः कथं पर्यणंसीत् ॥

ஆகௌமாராத்³கு³ருசரணஶுஶ்ரூஷயா ப்ரஹ்ம வித்³யா
ஸ்வாஸ்தா²யாஸ்தா²மஹஹமஹதீ மார்ஜிதம்கௌசலம்யத்
நித்³ராஹேதோர்நிஶிநிஶிகதா:² ஶ்ருண்வதாம் பார்தி²வாநாம்
காலக்ஷேபௌபயிகமித³மப்யா: கத²ம் பர்யணம் ஸீத் ॥

ப்ரம்ம வித்யையில் ஆசைகொண்டு பால்யம் முதல் மிகவும் கஷ்டப்பட்டு குரு பணிவிடையால் அதில் ஸாமர்த்யத்தை அடைந்தேன். அதை என் சொந்தத்திற்குப் பயன் படுத்திக்கொள்ளாமல் பணத்தின் மீது மோஹம்கொண்டு பிறருக்குத் தூக்கம் வருவதற்காக வேதாந்த கதைகளைச் சொல்லுகிறேனே! ஆஹா! கஷ்டம்!

# தனுஷ்கோடி.

[புண்ய பாரத பூமியில் விளங்கும் எண்ணிறந்த தீர்த்தங்களுள் முக்கியமானவை கங்கையும், தனுஷ்கோடியும் ஆகும். எந்த தீர்த்தத்தின் மஹிமையைச் சொன்னாலும், அதை கங்காஸ்னனத்திற்கு ஒப்பிடுவது மரபு. கங்கையில் ஸ்நாநம் செய்து, அந்த தீர்த்தத்தால், ஸேதுவில் ஸ்ரீ ராமநாத ஸ்வாமிக்கு அபிஷேகம் செய்வது பக்தர்களின் வழக்கம். ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகள் கீழ்க்கண்ட கீர்த்தனத்தில் மற்றொரு விசேஷ தீர்த்தமொன்றை ஞாபகப்படுத்துகிறார்.]

ராகம்: தோடி.] பல்லவி. [தாளம்: ஆதி.

கோடி நதுலு தனுஷ்கோடி லோனுண்டக
ஏடிகி திரிகேவே ஓ மனஸா.

அனுபல்லவி.

ஸூடிக ச்யாம ஸுந்தர மூர்த்தினி
மாடிமாடிகி ஜூசே மஹா ராஜுலகு. (கோடி)

பொருள்— கோடி நதிகள் தனுஷ்கோடியில் இருக்க மனமே (பல இடங்களில் நீ) திரிவானேன்? அதுபோல கருத்துடன் நீலமேக ச்யாமளனை ஸுந்தர (ராம) மூர்த்தியை தியானம் செய்து (ஹ்ருதயகமலத்தில்) காணப்பெற்ற மஹாராஜர்களுக்கு (பாக்யசாலிகளுக்கு) இதர தேவதைகளின் உபாஸனை எதற்கு?

சரணம்.

கங்க நூபுரம்புனனு ஜனிஞ் செனு
ரங்குனி கனி காவேரி ராஜில்லெனு
பொங்குசு ஸ்ரீரகு நாதுனி ப்ரேமதோ
பொகடே தியாக ராஜு மனவி வினவே. (கோடி)

---

கையில் கடியாரம் கட்டிக்கொள்ளுதல்

பொருள்— கங்கை விஷ்ணுவின் பாதத்தில் தோன்றினுள். ஸ்ரீரங்கநாதனை தரிசித்து காவேரி ப்ரகாசிக்கிருள். அன்புகனிந்த பக்தியுடன் ஸ்ரீரகுநாதனை (ஆனந்தம்) பொங்கித் ததும்பத் துதிக்கும் (இந்த) தியாகராஜனின் விண்ணப்பத்தை (செவிசாய்த்துக்) கேட்கவும்.

**தாத்பர்யம்:**—ராமனே பரமாத்மா. அவனுடைய தியானமே ஸகல தேவதைகளின் தியானமாகும். அப்பரமனின் பாதத்தைக் கங்கை பற்றிப் புனிதமடைந்தாள். திருமுகத்தைக் காவேரி தரிசித்துப் பொங்கினுள். ஆனல் அவனே 'தனுஷ்கோடியில்' விளங்குபவன். தனுஷ்கோடி என்பதற்கு இங்கு ஸ்ரீ ராமபிரான் கையில் விளங்கும் தனுஸ்ஸின் (கோதண்டத்தின்) இரு முனைகள், எனப் பொருள்.

"தனுஸே ப்ரணவம்; அதன் லக்ஷ்யமே ப்ரும்மானந்தம்; பாணமே ஜீவாத்மா" என்ற ப்ரமாணவாக்யப்படி, கோதண்டம் தரித்து ஸாதுக்களை ரக்ஷிக்கவும், துஷ்டர்களுக்கு (பாப ஜன்மத்தால் அழிந்தவர்களுக்கு) சிக்ஷை என்ற நியமனத்தால், ஜன்ம ஸாபல்யம் அளிக்கவும், அயோத்தி நீங்கி அடவி வந்தனனன்றோ ரகுநந்தனன். கோதண்டத்தின் ஒரு முடிவில் பாதகமலம் விளங்குகிறது. கங்கை ஜனித்தது.

கோதண்டத்தின் மேல்முடிவில் அவன் முகமண்டலம் விளங்குகிறது. (காவேரி களிக்கக் கண்டது). யோகிகள் ப்ரணவ தியானத்தினுல் ப்ரணவ சிரஸில் விளங்கும் ப்ரும்மானந்தத்தை அடைகிருர்கள். அந்த ஆனந்தமே ராமனுன பரப்ரும்மம்.

ப்ரணவமே ப்ரும்மத்தின் சக்தி. கோதண்டம் எனும் தனுஸே ப்ரணவம். கோதண்ட தீக்ஷா குருவாக (அந்த தனுஸ்ஸின் கோடியில்) விளங்குபவனே ப்ரும்ம ஸ்வரூபி. "தனுஷ்கோடி" என்பதால் ராம தியானமே! அறியப்படுகிறது. ஆதலின் ராமனை ஸேவித்தவர்களுக்கு ஸகலமும் கை கூடுமன்றோ!

---

**உடல் தெரிய மெல்லிய வஸ்த்ர மணிதல்**

# கார்த்திகைமீ கோசாரப்பலன்.

**ஜோதிஷபானு, E. S. K. ஸ்வாமி,**

பாரத் கிரஹ ஸஞ்சார ஆசிரியர்.

### அசுவனி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய

**மேஷராசி**

இம்மாதம் சனி பாக்கியத்திலும் குரு ஸப்தமத்திலும் அங்காரகன் ராசியிலு மிருக்கிறர்கள். இதனல் பழைய காரியங்கள் அனுகூலப்பட்டு வரும். குடும்ப நிர்வாகத்தில் சமாளிக்கும் திறமை ஏற்படும். உத்தியோகத்தில் புதிய மாற்றமும் சிலருக்கு நிம்மதி ஏற்படுவதும் வியாபாரத்தில் புதிய சில சௌகர்யங்களும் உண்டாகும். சிலருக்கு சுபவிஷயமான முயற்சிகளில் தீவிரம் ஏற்படும்.

### கிருத். 2ம்பாதம் முதல் ரோகணி, மிருகசீரிஷம் 2ம்பாதம் முடிய

**ரிஷபராசி**

அஷ்டமத்தில் சுப க்ஷேத்திரத்தில் சனியும், ஆறில் குருவும், விரயத்தில் அங்காரகனும் இருப்பதால் இதனல் செய்வேலைகளில் புதிய முயற்சிகள் உண்டாகும். சினேகத்தால் வருத்தம் ஏற்படும். ஆரோக்ய வகையில் சிலவுகள் உண்டாகும். எதிலும் தடைகள் ஏற்பட்டு கூடிவரும். பந்துக்களால் வருத்தம் உண்டாகும். நிம்மதி குறைந்துகாட்டும். பிரதி வியாழக்கிழமையிலும் ஒருவருக்கு அன்னம் போடுவது நன்மை. சனி ப்ரீதியும் செய்துவரவும்.

### மிருகசீரிஷம் 3ம்பாதம்முதல் திருவா. புனர்வசு 3ம்பாதம் முடிய

**மிதுனராசி**

ஸப்தமத்தில் சனியும், பஞ்சமத்தில் குருவும், லாபத்தில் அங்காரகனும் இருப்பதால் உத்தியோகத்தில் அனுகூலமாற்றம் உண்டாகும். கொடுப்பல் வகை நிர்ப்பந்தம் குறையும். மேலோர் நேசம் ஏற்படும். சுபகாரியங்களில் சிலவு உண்டாகும். குடும்ப நன்மை ஏற்படும். பந்து, சிநேகிதர் ஆதரவும், தொழில் வலுப்பதும் ஏற்பட்டுவரும்.

### புனர்வஸு 4ம்பாதம் முதல் புஷ்யம் ஆயில்யம் முடிய

**கடகராசி**

ஆறில் சனியும், நான்கில் குருவும், மூன்றில் ராகுவும், ஒன்றில் கேதுவும் இருப்பதால் வியாபாரத்தில் புதிய மாற்றம் உண்டாகும். சிலருக்கு கூட்டு ஏற்படும். அடிமையாட்களால் வருத்தம் உண்டாகும். ஆரோக்ய வகையில் சிலவு ஏற்படும். குடும்ப சௌக்யம் ஏற்படும். வீண்வகையில் சிலவு செய்ய நேரும். சிலவுகள் அதிகப்பட்டுவரும். பிரதி வெள்ளிக்கிழமையிலும் துர்க்கைக்கு அர்ச்சனைசெய்து வருவது நன்மை.

---

**இவைபோன்றதில் தர்மாசார்யருக்கு வெறுப்பே.**

## மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய

### சிம்மராசி

சனி பஞ்சமத்திலும், குரு மூன்றிலும், ராகு தனத்திலும், கேது அஷ்டமத்திலும் இருப்பதால் கொடுப்பல் வகையில் சில நிர்ப்பந்தம் உண்டாகும். சிலருக்கு வரவேண்டியவை தடைபடும். அலைச்சல் காரியங்களில் ஈடுபடும்படி யாகும். வருமானம் வந்தும் நிம்மதியிராது. மித்ராதிகளால் விரோதம் ஏற்படும். தேக சுகம் சிறிது பாதித்துக் குணமாகும். சில்லரைக் கடன்களால் நச்சரிப்பு ஏற்பட்டுவரும். சினேகிதரால் வருத்தமும் ஏற்பட்டுவருவதாகும். தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரத்தைப் பாராயணம்செய்துவர தன கஷ்டம் நீங்கி சுகம் ஏற்படும்.

## உத்திரம் 2ம்பாதம் முதல் ஹஸ்தம், சித்திரை 2ம்பாதம் முடிய

### கன்னியாராசி

சனி நான்கிலும், குரு இரண்டிலும், ராகு ராசியிலும், கேது சப்தமத்திலும் இருப்பதால் ஆரோக்கியவகையில் சிலவுகள் உண்டாகும். சிலருக்கு இருப்பிடம் மாறும்படியாகும். வெளியூர் போய்வர நேரும். சிலபொருள் விற்கும்படியாகும். பந்துக்களால் கிலேசம் உண்டாகும். தெய்வபக்தியில் ஈடுபடும்படியாகும். சிலருக்கு உத்தியோகத்தில் மாற்றமும் ஏற்படும். ஆதித்ய ஹிருதயம் தினமும் பாராயணம் செய்ய பீடைகள் விலகி சௌக்கியம் உண்டாகும்.

## சித்திரை 3ம்பாதம் முதல் சுவாதி, விசாகம் 3ம்பாதம் முடிய.

### துலாராசி

சனி மூன்றிலும், குரு ராசியிலும், ராகு விரயத்திலும், கேது ஆறிலும் இருக்கிறார்கள். குடும்ப நிர்வாகத்தில் சிறிது வருத்தம் ஏற்பட்டு நீங்கும். சிலரை நம்பி ஏமாறும்படி யாகும். வீண் சிலவுகள் உண்டாகும். ஸ்திரீகளால் மன வருத்தம் ஏற்படும். வீண்வகையில் சிலவுகள் உண்டாகும். துணிகரமான செயல்களில் ஈடுபடும்படி யாகும். வர்த்தக நடப்பில் சுகம் குறையும். சிலருக்கு உத்தியோகத்தில் சோர்வு ஏற்படும். தினமும் ஆலய தர்சனமும் வாரம் ஒருமுறை சுப்ரமண்யருக்கு அர்ச்சனையும் செய்து வருவது நன்மை தரும்.

## விசாகம் 4ம்பாதம் முதல், அனுஷம், கேட்டை முடிய

### விருச்சிகராசி

சனி தனத்திலும், குரு விரயத்திலும், ராகு லாபத்திலும், கேது பஞ்சமத்திலும் இருப்பதால் கொடுப்பல் வகையில் நிர்ப்பந்தம் உண்டாகும். அலைச்சல் அதிகமாகும். பழைய நடப்புகளில் கிலேசம் ஏற்படும். ஆரோக்கிய வகையில் சிலவு உண்டாகும். குடும்பத்தில் நிம்மதிக் குறைவு ஏற்படும். பண நடப்பில் சிரமமும் சிலர் பகையும் ஏற்படும். உத்தியோகத்தில் அதிகாரியால் வருத்தம் ஏற்படும். வியாபாரத்தில் சிலசிக்கல் ஏற்பட்டு நீங்கும். பிரதி வெள்ளிக்கிழமையிலும் அம்பாளுக்கு அர்ச்சனை செய்துவருவதுடன், விஷ்ணுவுக்கு பொங்கல் நைவேத்தியம் செய்ய நன்மையாகும்.

---

*பெரியோர் முன்னிலையில் பேசாதே, பாடாதே.*

## மூலம், பூராடம், உத்திராடம் முதல்பாதம் முடிய

**தனுர்ராசி**

சனி ராசியிலும், கேது நான்கிலும், ராகு பத்திலும், குரு லாபத்திலும் இருக்கிறுர்கள். இதனுல் முயற்சிகளில் முதலில் சோர்வு ஏற்பட்டு பின் அனு கூலம் தரும். வியாபாரத்தில் நன்மை ஏற்படும். கூட்டு சம்மந்தத்தில் மேன்மை யுண்டாகும். தேக அசக்தம் ஏற்பட்டு நீங்கும். சிலருக்கு வெளியூர் போய்வர நேரும். சிலருக்கு பந்து சேர்க்கை உண்டாகும். புதிய சிநேகமும் பிறருல் ஆதரவும் ஏற்படும். உத்தியோகஸ்தர்களுக்குத் திருப்தி ஏற்படும். முடிவில் முயற்சிகள் கூடிவரும்.

## உத்திராடம் 2ம்பாதம் முதல்
## திருவோணம், அவிட்டம் 2ம்பாதம் முடிய

**மகரராசி**

சனி விரயத்திலும், கேது மூன்றிலும், ராகு பாக்கியத்திலும், பத்தில் குருவும் இருக்கிறுர்கள். இதனுல் சிலருக்கு இருப்பிடம் மாறும்படியாகும். வெளியூர் போய்வர நேரும். உத்தியோகத்தில் திருப்தியற்ற மாறுதல் ஏற்படும். செய்தொழில் விரயம் அதிகமாகி திருப்தி குறையும். சிலரிடம் பகை ஏற்பட்டு நீங்கும். அன்னியர் சகாயத்தை எதிர்பார்க்கும்படியாகும். தெய்வ காரியங்களில் சிலவுகள் உண்டாகும். புதிய முயற்சிகள் தடைப்படும். நிம்மதி குறைந்துகாட்டும். எள்ளு கலந்த அன்னம் சிறுவர்களுக்கு தானம் செய்வதோடு மகா விஷ்ணுவுக்கு அபிஷேகம் செய்வது உத்தமம்.

## அவிட்டம் 3ம்பாதம் முதல்
## சதயம், பூரட்டாதி 3ம்பாதம் முடிய

**கும்பராசி**

சனி லாபத்திலும், கேது தனத்திலும், அஷ்டமத்தில் ராகுவும், பாக்கியத்தில் குருவும் இருக்கிறுர்கள். செய்தொழிலில் வருமானம் கூடும். ஆயினும் சிலவுகள் அதிகரித்துவரும். குடும்பத்தில் ஆரோக்கிய வகையில் சிலவுகள் உண்டாகும். மனைவி புத்திரர்கள் சௌக்யமும் புண்ணிய காரியங்களில் சிலவுகளும் ஏற்படும். சுபமுயற்சிகள் சிலருக்குக் கூடிவரும். பழைய கொடுப்பல்வகை நீங்கிவரும். விரோதம் தணியும். விவாத வியாஜ்ஜியங்களில் அனுகூலம் ஏற்படும். அன்னியர் சகாயம் ஏற்பட்டு வரும். இம்மாதம் சமநிலையாக நடந்துவரும்.

## பூரட்டாதி 4ம்பாதம் முதல்
## உத்திரட்டாதி, ரேவதி முடிய

**மீனராசி**

ராசியில் கேதுவும், ஏழில் ராகுவும், அஷ்டமத்தில் குருவும், பத்தில் சனியும் இருக்கிறுர்கள். இதனுல் தொழில் நடப்பில் சில பாதகம் ஏற்பட்டு நீங்கும். அதிகப் பணச்சிலவு ஏற்படும். சினேக நன்மை உண்டாகும். வியாபாரத்தில் புதியவகை மாற்றம் உண்டாகும். உத்தியோகஸ்தர்களுக்கு அதிர்ப்தியான மாறுதல் ஏற்படும். வருமானம் வந்தும் மனதிற்கு நிம்மதியிராது. சிலர் கடன் வாங்கும்படி யாகும். சிலபொருள் விற்பனை செய்யவும் ஏற்படும். சனிக்கிழமையில் சனிக்கு அர்ச்சனையும் காளிக்கு அபிஷேகமும் செய்வது நன்மையாகும்.

---

***பிறருக்கு மறைக்காமல் நில். சீக்கிரம் செல்.***

# ரஸமான சொற்கள்.

[நம் நாடு க்ஞானிகள் யோகிகள் கவிகள் தார்மிகர் வாழும் நந்நாடு. அத்தகைய மஹான்களின் செயலும் அவர்களிடமிருந்து உதிர்ந்த முத்துபோன்ற சொற்களும் விலையுயர்ந்தவை ரஸம் நிறைந்தவை. அவைகள் நமக்குப் பெரும் வழித்துணை.]

## எதையும் எப்பொழுதும் சிவார்ப்பணம் செய்.

தமிழ் நாட்டிலே தோன்றின ஸமயாசார்யர் நால்வரிலே ஸக்யபக்தியில் ஈடுபட்டவர் சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள். அவருக்கு க்ஞானத்தை விருத்தி செய்யும் தூதுவளங்கீரை மிகப்ரியமானது. நித்யம் அந்தக்கீரையைக் கொண்டு கொடுத்து முதலில் அவரை வஶ்யமாக்கினூர் ஸோமயாஜி நாயனூர். அவர் மூலமாக பரமஶிவன் நேராக வந்து அவர் செய்த யாகத்திலே ஹவிஸ்ஸைப் பெற்றுச் சென்றூர். திருமாளம் என்ற க்ஷேத்ரத்திலே இன்றும் அந்த ஐதிஹ்யம் காட்டப்படுகிறது. ஒருநாள் அவர் கீரை ஆய்ந்து கொண்டிருக்கும்பொழுது ஒரு விருந்தாளி வந்தார். அவரை ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் வரவேற்று உபசரித்தார். வந்தவர் அவருடன் சேர்ந்து பேசிக் கொண்டே கீரையை ஆய்ந்து தனியாக வைத்தார். ஸுந்தரமூர்த்திஸ்வாமிகளது இல்லாள் அக் கீரையை அள்ளிச்செல்ல வந்தாள். விருந்தினர் ஆய்ந்த கீரையை வாசலிலே எறிந்து சுந்தரர் ஆய்ந்த கீரையை மாத்திரம் உள்ளே எடுத்துச் சென்றூள்.

ஸுந்தரர் இதைக் கண்டு வியந்து ஏனதை எறிந்தாய்? என்று வினவினூர். அது ஶிவ நிர்மால்யம் என்றூள் அவள். நிர்மால்யம் எனில் பூஜை நைவேத்யம் செய்த பொருள் என்று அர்த்தம். இது பச்சைக் கீரை அல்லவா? என்றூர் ஸுந்தரர். விருந்தினர் அதை ஆயும் பொழுதே மநதில் ஶிவார்ப்பணம் ஶிவார்ப்பணம் என மநதால் எண்ணினூர் என்று மனைவி கூறினூள். திடீரென வந்தவர் மறைந்தார். ஶிவனே விருந்தினராக வந்து எதை செய்கிறூயோ? எதைப் புஜிக்கிறூயோ? எதைஹோமம் செய்கிறூயோ? எதை தாநம் செய்கிறூயோ? எந்த தபஸ் செய்கிறூயோ அதை எல்லாம் பகவானுக்கு அர்ப்பணம் செய் என்ற உபநிஷத்தைக் கற்பித்தார் என எண்ணினூர். கற்பினூல் மனைவி அதை அறிந்தாள்.

யத் கரோஷி-யத் அச்நாஸி யத் ஜுஹோஷி-ததாஸியத் |
யத் தபஸ்யஸி-கௌந்தேய தத் குருஷ்வ மதர்ப்பணம். ||

**வழியை மரித்துக்கொண்டு நிற்காதே.**

# ஹாலாஸ்ய மஹிமை.

## திருவிளையாடற் புராணம்.

### இந்த்ரனது பிரும்மஹத்தி அகன்றது.

ஸ்வர்க்காதிபதியான தேவேந்திரன் கொலுவில் வீற்று அப்ஸரஸ்ஸுகளின் நடநத்தைப் பார்த்துக்கொண் டிருந்தான். அச்சமயம் குருவான பிரஹஸ்பதி ஸபைக்கு வந்தார். இந்த்ரன் அவரைப் பார்த்தும் எழுந்து அவரை வரவேற்கவில்லை. அவர் ஒன்றும் கூருமல் வந்தவழியே வீடு சென்ருர். இந்த்ரன் மநம், தான் செய்த தவறை உணர்ந்தது. குருவைத்தேடி அவர் வீடு சென்ருன். அவர் இவன் கண்ணில் படவில்லை. வீடு திரும்பிஞன். நாளுக்கு நாள் காந்தியும் லக்ஷ்மியும் குறைந்தது. இதை அறிந்த அரக்கர் அவன் மீது படையெடுத்தனர். ஶக்ரன் சதுர் முகனிடம் சென்று தன் கஷ்டத்தைக் கூறிஞர்.

அவர் த்வஷ்டாவின் புத்ரரான விஶ்வரூபனைப் புரோகிதராகக் கொள். அவரிடமுள்ள ஶிவகவசத்தால் ஶத்ரு பயம் நீங்குமென்ருர். அங்ஙனமே விஶ்வரூபரைக் குருவாகக்கொண்டு ராஜ்யபாரம் செய்தான். அவரை அண்டி அஸுரர்கள், நீ எங்களது ஸஹோதரியின் புத்ரர்! எங்களை அழிக்க முயலாதே! நன்மை செய்! என்று வேண்டினர். அவர் தேவர் முன்னிலையில் தேவர் நன்மைக் காக ஹோமம் செய்தார். தேவர் சென்றபின் அஸுரரது நன்மைக்காக ஹோமம் செய்தார். இதையறிந்த இந்த்ரன் கோபங்கொண்டு வஜ்ரத்தால் அவர் கழுத்தை அறுத்தார்.

அந்த ஹத்தி தோஷம் ஶக்ரனைச் சூழ்ந்தது. அமரர் அனைவரும் ஒன்றுகூடி இந்த பாபத்தை வாங்கிக்கொள்ப வருக்கு வரம் தருகிருேம் என்றனர். பூதேவி அந்த பாபத்தில் கால்பங்கு வாங்கிக்கொண்டாள். அதே களர் பூமி என ஒன்றும் விளையாத மண்ணும். பூமியில் தோண் டப்படும் பள்ளம் தாஞகவே துந்துவிட வேண்டுமென வரம்பெற்ருள். மாநிடப்பெண்கள் ஒரு கால் பங்கைப்

---

பெற்றனர். அதே மாதவிடாய் என்பதாம். பிரஸவம் ஆகும்வரை புருஷனுடன் சேர்ந்தாலும் கருவுக்கு ஆபத்தில்லாதிருக்கவேண்டும் என வரம் பெற்றனர். மரங்கள் தங்களை வெட்டினுலும் வளரவேண்டுமென வரம்பெற்றன. அவைகள் பெற்ற கால்பங்கு தோஷம் பிசின் அல்லது கோந்து வடிவமாக வெளியாகிறது. அதேபோல் ஜலமும் கால்பங்கு பெற்றது. அது நுரைரூபமாக இருக்கின்றது. துண்டுபடாமல் தாரையாக இருக்கவேண்டும். பூமியைத் தோண்டினுல் ஊற்ருக வரவேண்டுமென வரம் பெற்றது. இந்த்ரனது ஹத்தி அகன்றது.

தனது புத்ரனை வலுவிலே அழைத்துப் புரோஹிதனுக்கிக் கொன்றதால் இந்த்ரனைக் கொல்லக்கூடிய ஒரு புத்ரன் உண்டாகவேண்டுமென ஒரு வேள்வி செய்தார் த்வஷ்டா. அதில் ஸ்வரம் பிசகியதால் இந்த்ரனைக் கொல்லும் புத்ரனுக்குப் பதிலாக இந்த்ரனுல் கொல்லத்தக்க புத்ரன் பிறந்தான். அவனே விருத்தாஸுரன். தந்தை உத்தரவுப்படி அவன் மஹேந்த்ரனுடன் போர் புரிந்தான். முழுமூச்சுடன் இருவரும் கடும்போர் செய்தனர். இந்தப் போர், "விருத்ரவாஸவ போர்போல்" என்று எடுத்துக் காட்டாக பல போர்களில் கூறப்படுகின்றது. முடிவில் ஶக்ரன் தோல்வியுற்று பிரும்மாவினிடம் சென்று முறையிட்டான். அவர் ஶக்ரனுடன் வைகுண்டம் சென்று பகவானை வணங்கி விருத்ரனைக் கொன்று இந்த்ரனுக்கு ராஜ்யம் கிடைக்கும்படிச் செய்யவேண்டினுர்.

தேவாஸுரர் சேர்ந்து பாற்கடலைக் கடையும்போது அஸ்த்ரமில்லாமல் வரவேண்டும் என்ற விதியைத் தழுவி நீங்கள் ததீசி முனிவரிடம் வஜ்ரம் முதலிய ஆயுதங்களை வைத்தீர்கள். வெகுகாலமாகியும் ஒருவரும் அதைக் கேளாததால் வெளியில் அதை வைத்திருந்தால் ரக்ஷிக்க முடியாதெனக் கருதி விழிங்கிவிட்டார் முனிவர். அது அவர் முதுகெலும்பில் தங்கி மிக்க பலமுள்ளதாக இருக்கிறது. அதைக்கொண்டு புதிய வஜ்ராயுதம் செய்தால் விருத்ரனைக் கொல்லலாம் என்ருர் மஹாவிஷ்ணு. அங்ஙனமே செய்து மறுமுறை அரக்கருடன் போர்புரிந்தனர். அஸுரர் பலர் கடலில் மூழ்கியிருந்து அடிக்கடி வெளியில்

---

**பிறரிடம் பேசும்போது கண்டதைக் கேட்காதே.**

வந்து ஸாதுக்களையும் தேவர்களையம் ஹிம்ஸித்தனர். இதை அறிந்த அகஸ்த்யர் கடல்நீரைக் குடித்துவிட்டார். மிகக் கடுமையாக நடந்த தேவாஸுரப் போரில் வஜ்ரத்தினல் ஶக்ரன் விருத்ரனைக் கொன்றுன். தேவர் வெற்றி பெற்றுலும் ப்ராம்மணனை விருத்ரனைக்கொன்ற பாபம் அவர்களைப் பீடித்தது.

ஶக்ரன் மாநஸஸரஸ்ஸில் தாமரைத்தண்டினுள் பதுங்கினின்றுன். அச்சமயம் நூறு அஶ்வமேத யாகம் செய்த நகுஷனை இந்த்ர பதவியில் அமைத்தனர். அவன் இந்த்ராணியிடம் ஆசைகொண்டு ஸப்தர்ஷிகளைப் பல்லக்குத் தூக்கும்படிச் செய்தான். அவஸரத்தால் அவன் அகஸ்த்யரைக் காலால் சீண்ட அவனை ஸர்ப்பமாகும்படிச் சபித்தார். தேவர் ஒன்றுகூடி பிருஹஸ்பதியை வேண்ட அவர் பூலோகத்திலுள்ள ஹாலாஸ்ய க்ஷேத்ரம் ஒன்றே பிரும்மஹத்தியை அகற்றவல்லதென்றுர். ஆங்கு ஸ்வயம்பு லிங்கமாக உள்ள ஸுந்தரேசனைத் தர்சித்தான் இந்த்ரன். உடனே ஹத்திதோஷமகன்றது. ஆங்குள்ள காடுகளைவெட்டி புதிய ஆலயமமைத்தார். எட்டுதிக் கஜங்களும் முப்பத்திரண்டு ஸிம்மங்களும் அறுபத்துநான்கு ஶிவகணங்களும் சேர்ந்து ஒரு திவ்ய விமாநத்தைக் கொண்டு வந்தனர். இப்பொழுதும் சித்ரா பௌர்ணமியில் தேவேந்த்ரன் வந்து மதுரா நாதனைப் பூஜிக்கிருர்.

## 2. ஐராவத சாபம் அகன்றது.

ஒரு ஸமயம் தூர்வாஸமுநிவர் காஶி விஶ்வநாதரைத் தர்ஶித்து அவரளித்த தாமரைப்பூ மாலையைப் பெற்றுக்கொண்டு ஆகாயமார்க்கமாகச் சென்றுர். வழியில் ஐராவதத்தின் மீதமர்ந்து வரும் ஶக்ரனைக் கண்டார். அந்த மாலையை அவனுக்களித்தார். அவனதை அலக்ஷியமாக ஒரு கையால் வாங்கி ஐராவதத்தின்மீது வைத்தான். அதை யானை துதிக்கையால் எடுத்துக் காலால் மிதித்தது. இதைக்கண்டு கோபங்கொண்ட முநிவர் இந்த்ரனைப் பாண்டிய தேசத்தரசனிடம் தோல்வி பெறுவாய் என்றும் ஐராவதம் காட்டானையாகித் திரியுமென்றும் ஶபித்தார். இந்த்ரன் காலில்விழுந்து வேண்ட மதுராநாதன் அருளால் ஶாபமகலுமென்றுர். ஐராவதம் தற்செயலாக மதுரை

---

**அன்யருடன் பேசுகையில் நீ குறிக்கிடாதே.**

பொற்றாமரைக் குளத்தில் மூழ்க அதன் பாபமகன்று ஸ்வர்க்கம் சென்றது. அதன் நினைவாகப் பல அம்சங்கள் இருக்கின்றன.

### 3. குலசேகர பாண்டியனுக்கு அருள்புரிதல்.

மணலூர் (மணவூர்) என்ற ஊரில் தநஞ்ஜயன் என்று ஓர் வைச்யனிருந்தான். சிறந்த சிவபக்தன். தற்செயலாக ஒரு ஸோமவாரத்தன்று கதம்பவநம் சென்றான். ஆங்கு அமரர் வந்து நாலுகாலம் சிவலிங்கத்தை அர்ச்சிக்கக்கண்டான். தன்னிடமுள்ள கஸ்தூரி குங்குமப்பூ முதலியவைகளை அளித்தான். காலையில் எழுந்தான். அங்கு ஒருவருமில்லை. அந்த தேச மன்னனான குலசேகர பாண்டியனிடம் இந்த ஆச்சர்யத்தைக் கூறினான். அரசனது கனவில் பகவான் தோன்றி காக்ஷி அளித்தார். பாண்டியன் காட்டை அழித்து எப்படி நகரம் அமைப்பதென யோசிக்கும்போது பகவான் ஒரு ஸித்தனைப்போல் வந்து ஆகமவிதியைக் கூறினார். தனது ஜடை மகுடத்திலுள்ள சந்த்ர கிரணத்திலிருந்து அமிருதத்தை அந்நகர் மீது சிந்தினார். அது மதுரமானது ஆதலால் **மதுராநகரம்** எனப்பெயர்வழங்கிற்று. அரசன் தன் மகனான மலயத்வஜ பாண்டியனுக்குப் பட்டம்கட்டி தபோவநம் சென்றான்.

### 4. தேவி மீனாக்ஷியின் அவதாரமும் ஆக்ஷியும்.

மலயத்வஜ பாண்டியன் மஹாவீரன். தர்மசீலன். சோழராஜன் மகளான காஞ்சனமாலையை மணந்தான். மாநிலத்தில் கிட்டாத ஸகல போகங்களையும் பெற்றான். புத்ர பாக்யம் மாத்திரம் இல்லை. அச்வமேத யாகம் பல செய்தான். அதில் ஒரு புத்ரகாமேஷ்டியும் செய்தான். பார்வதீதேவி கருணையுடன் தீயிலிருந்து மூன்று வயது குழந்தையாகத் தோன்றினாள். அரசன் அடைந்த ஆநந்தத்திற்கு அளவேயில்லை. ஆனால் குழந்தைக்கு மூன்று ஸ்தநங்கள் இருந்தன. இதைக் கண்டு ஆராத்துயரம் அடைந்தான். இவள் புருஷனை ஸந்திக்கும்போது அதிகமான ஸ்தநம் மறையும்! இவளுக்கு முடிசூட்டு! என்று ஆகாயத்திலிருந்து ஒரு சொல் தோன்றிற்று. அரசன் தடாதகா **மீனாக்ஷி** எனப் பெயரிட்டு பேரன்புடன் வளர்த்தான் அவளை.

---

**முன்னும் பின்னும் இருபுறங்களிலும் பார்த்து நட.**

# ஆயுர்வேதம் (2)

டாக்டர். V. K. வெங்கிடசாமி, M. B., B. S., F. I. M.

**வை**த்யன், ஔஷதம், பரிசாரகன், வியாதியஸ்தன் என்னும் இவை சிகித்ஸைக்கு நான்கு பாதங்களாகக் கூறப்படுகின்றன. ஒவ்வொன்றும் நான்கு குணங்களைக் கொண்டிருக்கவேண்டும்.

**வைத்யன்:—** நற்குணம் பொருந்திய பெருமை பெற்ற ஆசாரியரிடம் பயிற்சி பெற்றிருத்தல், அநுபவமும் அப்யாஸமும் கூடிய காரியத்தைச் செய்தல், தொழிலில் நிபுணத்வம் பரிசுத்தம் உள்ளவனுயிருத்தல்.

**ஔஷதம்:—** அநேகவிதமாய் தயாரிக்கத் தகுதியாய் இருத்தல், பலகுணங்களை உடைத்தாதல், நல்ல பூமியில் உண்டாகிச் சரியாக வளர்க்கப்படல், வியாதிகளுக்கு ஏற்றவாறு அமைதல்.

**பரிசாரகன்:—** வியாதியஸ்தனிடம் அன்புடமை, பரிசுத்தம், திறமையுடைமை, புத்திசாலித்தனம்.

**வியாதிஸ்தன்:—** தனவந்தனுய் இருத்தல், வைத்யனுக்கு அடங்கியதன்மை, தைர்யம், ஞாபகம்.

சிகித்ஸையின் பலனும் நான்கு விதமாக கூறப்பட்டிருக்கிறது. சுலபமாய் நிவர்த்தியானுல் **சுகஸாத்யம்** என்றும், வெகு பிரயாசப்பட்டுத் தீர்ந்தால் **கஷ்டஸாத்யம்** என்றும் நிவர்த்தி செய்ய இயலாத போது சீக்கிரத்தில் பிராணனைப் போகவிடாமல் தடுத்தல் **யாம்யம்** என்றும் எவ்விதத்திலும் சிகித்ஸைக்கு வசப்படாவிடில் **அஸாத்யம்** என்றும் சொல்லப்பட்டுள்ளது.

திரிதோஷங்களில் வாதம் வெகுமுக்யமானது. பித்தம்-கபம் இரண்டும் வாதமின்றி வேலை செய்யாது. வாதத்தை வாயு என்றும் கூறுவார்கள். பிராண-அபான-வியான-உதான-ஸமான என வாயுக்கள் ஐந்து வகைப்படும். வாயு எவ்வளவு முக்யமென்பது சாதாரணமாய் பேசும்போதும் தெரியவரும். ஒருவனுக்கு பிராணம்

போயிற்று என்னும் போது ஐந்து வாயுக்களில் முதன்மையான பிராண வாயு உடலைவிட்டுப் பிரிந்தது எனப் பொருள். இவ்வைந்து வாயுக்களே, ஸ்தூல தேகத்தைப் பிணமாக விட்டுப் போகும்போது ஸூக்ஷ்ம சரீரத்தைப் பற்றிச் செல்லுகின்றன.

ஒவ்வொரு தோஷமும் தேஹம் முழுமையும் பரவி சஞ்சரித்தாலும் தனக்கென்று ஒரு இடத்தை முக்யமாகக் கொண்டுள்ளன. வாதத்திற்கு நாபிக்குக் கீழ் பக்வாசயம் என்ற இடம் முக்ய ஸ்தானம். இடுப்பு, துடைகள். செவிகள், எலும்புகள், ஸ்பர்சேந்திரியமான சர்மம், இவைகளில் அதிகமாகப் பரவும். இதன் முக்கிய குணங்களாவன- ரூக்ஷம் (வரட்சி) லகு, சீதம், கரம் (சுரசுரப்பு) ஸௌக்ஷ்மம் (நுட்பமாய்ப் பரவும் தன்மை) சலம் (ஸதா அசையும் ஸ்வபாவம்). இத்தகைய வாயுவானது நமது தேகத்தில் பின்வரும் காரியங்களைச் செய்துவருகின்றன.

உத்ஸாஹமூட்டுதல் போன்ற மனோவிருத்திகள்-பேசுதல் பேசாமைப்போன்ற வாக்கின் காரியங்கள்—ஸ்வாஸத்தை உள்ளிழுத்து வெளிவிடல்- காயச்செயல்களான நெகிழ்வித்தல், அசைத்தல், சுற்றுதல், அசைவற்றுப்போதல், புரளுதல், சிலிர்த்தல், நடுக்கல், பிளத்தல், சிதைத்தல், சேர்த்தல், சுருக்கல், விஸ்தாரப்படுத்தல், இடைவெளி அமைத்தல், இளைத்தல், திமிர்த்தல், குடைத்தல், வலித்தல், குத்தல், உலர்த்தல் முதலியன— இருமல் தும்மல், விஸர்ஜனம் போன்ற வேகங்களைச் செய்வித்தல்.

*(1)* பஞ்ச வாயுக்களில் **பிராணன்** என்பது சிரஸ்ஸில் தங்கி மார்பு, தொண்டை என்னுமிடங்களில் சஞ்சரிக்கும் மனம், புத்தி, இந்திரியங்கள், ஹ்ருதயம், இவற்றிற்கு ஆதாரமானது. ஸ்வாஸம்விடல், சிந்தல், உமிழ்தல் தும்மல், ஏப்பம், குடித்தல், விழுங்கல், இவை இதன் காரியங்கள். *(2)* **அபானவாயு** வானது மலாசயத்திலிருந்து கொண்டு, இடுப்பு, துடைகள்—மூத்திரபை—ஆண் பெண் குறிகள்—இவைகளில் ஸஞ்சரிக்கும். மல மூத்திரம் சுக்ல-சோணிதம், கர்ப்பம் இவற்றை வெளிப்படுத்தும். *(3)* **வியான வாயு** இருதயத்தினின்று தேகமெங்கும்

வெகுவேகத்துடன் பரவும். நடமாடல், கண் இமைதல் போல அவயவங்களைப் பலபக்கங்களில் செலுத்தல் முதலிய காரியங்கள் இதன் தொழில். (4) **உதான வாயு** மார்பில இருந்துகொண்டு நாசி-தொண்டை நாபி வரையில் பரவுகிறது பேசுதல், முயற்சி செய்தல், உத்ஸாஹம். தேஹவன்மையும்பொலிவும், ஞாபக சக்தி இவை இதன் காரியங்கள். (5) **ஸமானவாயு** ஜாடராக்னி ஸமீபத்திலிருந்து குடல் முழுவதும் வியாபிக்கும். இது உணவை கிரஹித்து பகவம் செய்து ஸாரத்தை எடுத்துக் கொண்டு மலமூத்ராதி திப்பிகளை வெளித் தள்ளுகிறது.

தைலங்களும் (ஸ்நேஹ வஸ்துக்கள்) மதுர-அம்ல லவண-ரஸங்களும் வாதத்தை சமனம் செய்யும். திக்த-கடு-கஷாய-ரஸங்கள் வாதத்தை அதிகரிக்கச்செய்யும். வஸ்தி என்ற கர்மா வாதத்தை வெளிபடுத்த சிறந்த ஸாதனம். தவிர தேகத்தைப் பிடித்துவிடல் கஷாயாதிகளால் ஸேகம் (தலையினின்று கொட்டுதல்) மாப்பண்ட பக்ஷயங்களை சூடாய் சாப்பிடல், மாம்ஸமும் அதன் ரஸமும், சுகானுபவம், வெல்லத்தினின்று தயாரித்த மதுபானம், ஸ்வேதம், உஷ்ணம், இவைபிரகோபித்த வாதத்தைக் குறைக்கும்.

ஸ்வபாவத்தில், சிலர் பிறவியினின்றே வாதப் பிரகிருதிகளாக இருப்பார்கள். இவர்கள் இளைத்தும் ஒல்லியாயும் உயரமாயும் வெடித்த சர்மத்தையும் ரோமத்தையும் கொண்டவராயும் உடலில் திடமின்றியும் இருப்பார்கள். கண்கள் பசையற்று, மலினமடைந்து, வட்டமாக நித்ரையிலும் விழித்திருப்பன போல அழகின்றி இருக்கும். இந்திரியங்களைக் கட்டமுடியாமலும், ஸ்த்ரீகளால் காதலிக்கப்படாமலும், அதிக ஸந்ததிகள் இல்லாதவர்களாகவும் இருப்பார்கள். பொல்லாதவர்கள், நிலையற்றவர்கள், பொறாமை, திருட்டுக்குணம் கொண்டவர்கள் அதிகம் பேசுபவார்கள். ஆனால் பேச்சு அற்பமாயும் அடிக்கடி நின்றும், முன்பின் சம்பந்தமின்றியும் இருக்கும். நடனம், கானம், ஹாஸ்யம் இவற்றில் அதிக பற்றுடையவர்கள். குளிர்ச்சியில் வெறுப்பு—அதிக உணவைக் கொள்ளல்— மதுர, லவண, கடு ரஸங்களில் விருப்பம்—

உஷ்ணத்தில் பிரியம்- நித்ரைக் குறைவு- ஆகாயத்திலும் மரங்களிலும் மலைகளிலும் போவதாகக் கனவு- ஆகிய வற்றைக் கொண்டவர்கள். இவர்கள் காகம், கழுகு, பெருச்சாளி, நாய், நரி, ஒட்டகம் இவ்வினத்தை ஒப்பான வர்கள்.

ரூக்ஷம், சீதம், அல்பம், இலகு இவ்வித ஆகாரங்களா லும் விழிப்பு-புணர்ச்சி, வ்யாயாமம், நடை, சவாரி செய் தல், விழுதல், உயர குதித்தல், தாண்டுதல், நீஞ்சுதல் ரக்தத்தையும் தோஷங்களையும் தேகத்தினின்று வெளிப் படுத்தல் ஆகியவற்றை அதிகம் செய்வதாலும் கவலை முதலிய மனக்கோளாறுலும் வேகங்களை அடக்குதலா லும், அமித போஜனம், ஆமதோஷம் இவைகளாலும், வருஷ ருதுவிலும், வாதம் அதிகரித்து வாதவியாதிகளை உண்டுபண்ணும். எதிரிடையானவைகளால் வாதம் க்ஷீணித்து தொந்தரவு செய்யும்.

வாத வ்ருத்தியால்-இளைத்தல், கருமை நிறம், உஷ் ணத்தில் பிரியம், நடுக்கம், வயிற்றுப் பொருமல், மலச் சிக்கல், வாய் பிதற்றல், நித்ரையின்மை, இந்த்ரியநாசம், தலைச்சுற்றல், உத்ஸாஹமின்மை, இவை உண்டாகும். வாதம் க்ஷீணித்தால்- சரீரமிளைத்தல், பேசுவதில் பிரிய மின்மை, நினைவு தடுமாறல், மூர்ச்சை, கபம் மேலிட்டு கபரோகங்கள் இவை சம்பவிக்கும்.

## ஔஷத வர்க்கம்

ஆயுர்வேதத்தில் முதன்மையான ஔஷதவகைகள் த்ரிகடுகமும் த்ரிபலையும் ஆகும். சுக்கு மிளகு திப்பிலி இம்மூன்றும் **த்ரிகடுகம்** எனப்படும். கடுக்காய் நெல்லிக் காய், தான்றிக்காய் இம்மூன்றும் **த்ரிபலை** எனப்படும். இவைகளின் குணங்களையும் உபயோகங்களையும் இப் பொழுது ஆராய்வோம். இங்கு தரப்படும் ஔஷத பிர யோகம் நோயணுகாமல் இருக்கவும் வியாதிகளைப் பூர்வ ரூபத்திலேயே தடுக்கவும் உபயோகமானதும் யாவரும் செய்துகொள்ளக் கூடியதும் அபாயமற்றதுமான முறை களேயாம். வியாதியின் ரூபம் ( முழுத் தோற்றம் ) உண்டாகும்போது வைத்யர்களைக்கொண்டே நிதானத்திற் குத்தக்க சிகித்ஸை செய்துகொள்ள வேண்டும்.

---

**அதைக்கொடு இதைக்கொடு என பறக்காதே.**

